**திருநெல்லை**

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – ஆனி

2024–ஜுலை

இணையவழி மலர் 1 – இதழ் 11

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்

# பொருளடக்கம்

# ஆசியுரை



**சீர் வளர் சீர்**

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

**கோவிலூர் ஆதினகர்த்தர்**

# பல்திறன் கல்வியும் நாச்சியப்ப சுவாமிகள் கல்லூரியும்

கல்வி நிலையங்கள் தற்போது பல்திறன் கூடங்களாக உருவாகி வருகின்றன. கற்பது மட்டும் கல்வி அல்ல. கற்பிப்பது மட்டும் கல்வி நிலையங்கள் பணியல்ல. நல்ல திறன் மிக்க அறிவைத் தரவேண்டியது கல்வியின் பயன் ஆகும். நல்ல திறன்களை வளர்ப்பது தற்போதைய கல்விக் கூடங்களின் தவிர்க்க முடியாத கடமையாகும். அவ்வகையில் கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் காட்சித் தொடர்பியலில் துறையில் பல காட்சித் திறன்கள் ஏற்படுத்தித் தரப்பெற்றுள்ளது. காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக அளவில், முழு கட்டமைப்பும் கொண்ட துறையாக கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் உள்ள காட்சித் தொடர்பியல் துறை (விஷுவல் கம்யூனிகேஷன்) விளங்குகிறது. இத்துறையில் இந்த மாதத்தில் இரண்டு முக்கிய ஒப்பந்தங்கள் கையொப்பமாகி பல நிகழ்வுகள் நடந்துள்ளன. நடத்தப்பட உள்ளன.

முதலாவது சென்னை ஆவிச்சி கலை மற்றும் அறிவியல் கல்லூரியின்

ஒத்துழைப்பாலும் பெருந்தன்மையினாலும் நிகழ்ந்தது அவர்களுடைய விஷுவல் கம்யூனிகேஷன் துறையில் மிகச் சிறந்த வல்லுநர்களை கொண்டு மாஸ்டர் கிளாஸ் நடத்தி வருகின்றனர் அந்த மாஸ்டர் கிளாஸ் சென்னையில் நடக்கும் அதே தருணத்தில் நம் கல்லூரியிலும் அதை பார்ப்பதற்கான வசதியை அவர்கள் செய்து கொடுத்துள்ளார்கள். அதில் அண்மையில் உலகளாவிய விருதுகள் பெற்ற திரு சந்தோஷ் சிவனை நம் மாணவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள்.

வருகின்ற ஜூலை 19, 20, 21 தேதிகளில் சென்னையில் பன்னாட்டு திரைப்பட விழா நடைபெற உள்ளது அதில் ஸ்பெயினை சேர்ந்த திரைப்படங்கள் காட்சிப்படுத்தப்படும். சென்னையில் அந்தத் திரைப்படங்கள் வெளியிடுகின்ற அதே நேரத்தில் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திலும் நம் கல்லூரியிலும் காட்சிப்படுத்த ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. சென்னை பன்னாட்டு திரைப்பட விழா மற்றும் அவ்விழாவில் காட்சிப்படுத்தப்படும் திரைப்படங்கள் இதுவரை சென்னையைத் தவிர வேறு எங்கும் காட்சிப்படுத்தப்பட்டதில்லை. முதன்முறையாக நம் கல்லூரியுடன் இணைந்து இவ்விழா பார்வைக்கு வருகின்றது.

இதைச் செயலாற்ற உதவிய அதன் தலைவர் திரு ஏ வி எம் கே சண்முகம் அவர்களின் முயற்சி மிகவும் பாராட்டுக்குரியது. இதுபோன்ற பன்னாட்டு திரைப்படங்கள் நமது பகுதியில் திரையிடப்படுவதால் நம்மிடம் படிக்கும் விஷுவல் கம்யூனிகேஷன் மாணவர்களுக்கு பன்னாட்டு தொழில் நுட்பங்களும் அவர்கள் கதை சொல்லுகின்ற விதத்தை உணர்ந்து கொள்ளும் வாய்ப்பும் கிடைக்கும். இந்த பன்னாட்டுத் திரைப்படங்கள் திரையிடப்படும் திரைப்பட விழாக்களும், மாஸ்டர் கிளாசும் மாதந்தோறும் நடைபெறக்கூடிய நிகழ்ச்சிகளாக இருக்கும் இதை நம் பகுதி மாணவர்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறோம் அதன் அடிப்படையில் திருவாடானை அரசு கலைக்கல்லூரி முதல்வருடன் தொடர்பு கொண்டு அவர்களுடைய விஷுவல் கம்யூனிகேஷன் மாணவர்களையும் நம் கல்லூரிக்கு அனுப்பி இந்த மாஸ்டர் கிளாசையும் பன்னாட்டு திரைப்படங்களையும் பார்க்க அனுமதி அளித்திருக்கிறோம்..

## காட்சிப் பதிவு மென்பொருள்

வளர்ச்சி என்பது நவீனத்தை நோக்கிய பயணமாகும். சென்ற இதழில் தெரிவித்தது போல புகைப்படக் கருவி(கேமரா) மூலமாக வருகை பதிவு செய்யும் நவீன மென்பொருள்கள் நம் கல்வி நிலையங்கள் பயன்படுத்தப்பட உள்ளன. இம்மென்பொருள் இன்னும் வளர்ச்சி பெற்று வருகைப் பதிவு மென்பொருள் பதிவாக மட்டும் இது இல்லாது இன்னும் பல திறன்களை அடக்கிய மென்பொருளாக உருவாக்கப்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்று வருகின்றன. நவீனத்தை நோக்கிய மென்பொருள் பயணமாக இது அமையும்

தமிழக அளவில் கல்வி நிலையங்களின் ஒத்துழைப்பு, திறன் வளர்ச்சி போன்றன அமைந்து வருவது மகிழ்ச்சிக்குரியது.

இந்திய நாட்டளவிலும், உலக அளவிலும் இத்திறன் மேம்பாட்டு கல்வி முறை அமையவேண்டும். அதற்கும் நமது கோவிலூர் கல்வி நிறுவனங்கள் தயராக உள்ளன. அண்மையில் ஒன்றிய அரசாங்கம் குற்றவியல் தொடர்பாக மூன்று சட்டங்கள் இயற்றியுள்ளது. அதில் முக்கியமாக, சாட்சியங்கள் எவ்வாறு சேகரிக்கப்பட வேண்டும் மற்றும் அவற்றை எப்படி நீதிமன்றங்களில் சமர்ப்பிக்க வேண்டும் என்பது குறித்து தொழில்நுட்பத்தில் பெரிய மாற்றங்கள் ஏற்பட உள்ளன. இது தொடர்பான கல்வி அளிப்பதற்கு இந்திய அளவில் குஜராத் மாநிலத்தில் ஒரு தனி பல்கலைக்கழகமே உருவாகியுள்ளது. இந்த பல்கலைக்கழகத்தில் பயில்பவர்களுக்கு பெரிய வேலை வாய்ப்பு இருப்பதாக நாம் உணர்கிறோம் இந்த பாடப்பிரிவுகளை நம் கல்லூரியில் அறிமுகம் செய்வதற்கான முயற்சிகளைத் துவக்கி உள்ளோம்.

இவ்வாறு பல்வேறு கல்வித் திறன்கள் வந்து குவியும் வண்ணம் நமது கல்வி நிலையங்களின் வளர்ச்சி அமைந்து வருவது மகிழ்ச்சிக்குரியது. வளர்க நவீனம். வளர்க கல்வித்திறன்கள்

## நாலாயிரம் நூல்கள் தந்துள்ள கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

கோவிலூர் மடாலயத்தின் இணைய நூலகம் தற்போது பெருமளவில் பயன்பாட்டுக்கு வந்துள்ளது. சான்றோர்களும் அறிஞர்களும் கோவிலூர் மடாலய இணைய நூலகத்தை நாள் தோறும் கண்டு, கற்று மகிழ்கின்றனர்.

இணைய நூலகத்தில் நூல் விவரத் தரவுகள் சரியான முறையில் அவ்வப்போது கணக்கிடப்பட வேண்டும். அவ்வாறு செய்யப்படுவதால் நூல்களின் எண்ணிக்கையில் துல்லியம், இணையத்தில் ஏற்றப்பட்ட நூல்கள் திரும்ப ஏற்றப்படாமல் இருத்தல் போன்ற நன்மைகள் கிடைக்கும். அவ்வகையில் கடந்த ஆண்டுகளில் இந்த நுல் விவரத் தரவுகள் சரிசெய்யப்பட்டு வரப்பெறுகின்றன. இருப்பினும் முந்தைய ஆண்டுகளில் அவ்வாறு இருக்கிறதா என்பதை நாம் ஆராய்ந்து பார்த்தபோது ஆயிரத்துக்கும் மேற்பட்ட நூல்கள் மின்படி (ஸ்கேன்) செய்யப்பெற்று ஏதோ காரணத்தினால் அவை நூலகத்தில் பதிவேற்றம் செய்யாமல் இருந்துள்ளன என்பதை அறிந்தோம் அவையெல்லாம் மிகவும் அரிதான நூல்கள். ஆகவே இப்போது அந்த நூல்களையும் பதிவேற்றம் செய்து கொண்டிருக்கிறோம். அடுத்த மாதத்திற்குள் முந்தைய ஆண்டுகளில் மின்பதிப்பு செய்யப் பெற்ற அனைத்து நூல்களும் பதிவேற்றம் ஆகிவிடும். இப்போது வரை சுமார் 4000 நூல்கள் நம் நூலகத்தில் பதிவேற்றம் ஆகி உள்ளன அடுத்த மாதத்தில் இந்த எண்ணிக்கை சுமார் 5000க்கு மேல் இருக்கும் என்று எண்ணுகிறோம். கம்பன் அறநிலை நூல்களும் இந்து மதாபிமான சங்கத் திலிருந்து வருகின்ற நூல்களும் இப்போது பதிவேற்றம் ஆகிக்கொண்டு உள்ளன. மிக விரைவில் மதுரை நகரத்தார் சங்கத்தின் நூல்களும் பதிவேற்றம் செய்யத் துவங்குவோம்.

இதைத்தவிர நமது நூலகத்தில் (Physical Library) உள்ள நூல்களின் எண்ணிக்கை சுமார் 40 ஆயிரம் ஆக

இருந்தது, இப்போது 43 ஆயிரத்து தாண்டி உள்ளது. நமது கிளை மடங்களிலிருந்து மெய்யப்ப சுவாமிகள் அருளாட்சியில் கோவிலூருக்கு வந்துள்ள நூல்களை நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருந்த வேலை இப்போது சற்று விரைவு படுத்தப் பட்டுள்ளது. அந்த நூல்களை சேர்க்கும் வேலையில் கலந்து கொள்ள விரும்பும் தன்னார்வத் தொண்டர்கள் நூலகர் திரு வெங்கடாசலத்தை 9442912649 என்ற எண்ணில் தொடர்பு கொள்ளவும்.

இவ்வாறு நூலகப்பணிகளும் நாள்தோறும் ஆக்கம் பெற்று வருகின்றன.

### அன்னதானம்

கல்வி, அறிவு, வளர்ச்சிப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுவரும் கோவிலூர் மடாலயம் அடியார்க்கு அன்னம் பாலிக்கும் அருமைப் பணிகளையும் செய்துவருகிறது. காசியில் நம் மடம் இருக்கும் அஸ்ஸி காட்டில் புதிய சமையல்கூடம் அமைக்கும் வேலை நிறைவு பெற்று விட்டது. விரைவில் அங்கு இப்போது நடைபெற்று வரும், நாள் ஒன்றுக்கு 150 அடியார்கள் அன்னதானத்தில் இருந்து நாள் ஒன்றுக்கு சுமார் 1000 அடியார்களுக்கான அன்னதானமாக வளரும்.காசி விசுவநாதர் கோவில் சார்பாக நாம் நிர்வகிக்க உள்ள அன்னதானமும் விரைவில் துவங்க காசி விசுவநாதர் அருள் புரிவாராக.

கோவிலூரிலும் நீராவி மற்றும் மின்சாரத்தில் இயங்கும் சமையல் கூடம் நிறுவும் வேலை நடை பெற்று வருகிறது.

அதில் இருந்து நகரத்தார் ஊர்களுக்கு உணவளிக்கும் திட்டம் வைத்திருப்போர் எங்களை அணுகினால் அவர்களுக்கு நம் அடக்க விலையில் சிறந்த, தரமான, பாதுகாப்பான உணவளிக்கத் தயாராக உள்ளோம்.

### ஓராண்டு நிறைவில் தென் சபாநாயகர் கோவில்

தென் சபாநாயகர் கோவில் ஓராண்டு நிறைவுற்று ஆனித் திருமஞ்சனமும் சிறப்பாக நடைபெற்றது.விரைவில் அங்கு கட்டியுள்ள புதிய மண்டபம் திறப்பு விழாவும் புதிதாக நிறுவி உள்ள பைரவர், சண்டிகேசுவரர் ,நால்வர், கருடாழ்வார் ,மற்றும் ஆஞ்சநேயர் திருமேனிகளும் வழிபாட்டுக்கு கொண்டுவரப்படும் நிகழ்வும் நடைபெறும்.

நாளும் நாளும் அடியார் பணிகளில், அறிவு கல்விப் பணிகளில் நம்மை ஈடுபடச் செய்து வரும் பரம்பொருளின் அருளுக்குக் கைமாறு ஏதும் இல்லை. அவன் அருளால் அவன்தாள் வணங்குவோம்.

**திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.**

## கோவிலூாின் கதை - 7

# சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகளின் வரலாறு




சீர் வளர் சீர் மகாதேவ
ஞான தேசிக சுவாமிகள்
(ஏழாம் பட்டம்)
(1919–1946)



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

கோவிலூர் வேதாந்த மடத்தின் ஏழாம் பட்டமாக அருள்பீடம் ஏறி, இருபத்தெட்டு ஆண்டுகள் அருளாட்சி நடத்திய தவசீலர் சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் ஆவார். இவர் திருவண்ணாமலை ஈசானிய மடத்தில் இருந்த காலத்தில் ரமண மகரிஷி இவருடன் அருள் நட்பு கொண்டிருந்தார். இவரின் காலத்தில் அதிக அளவில் வேதாந்தப் பாடம்

கற்கும் சீடர்கள் அமைந்து அருள் சுரந்தனர்.

## அண்ணாமலையார் தந்த செல்வர்

அண்ணாமலை என்ற இயற்பெயர் பெற்ற ஏழாம் பட்ட சுவாமிகள் சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகளால் மாகதேவ ஞான தேசிகர் என்ற தீட்சா நாமத்தைப் பெற்றவர். இவர் தேவகோட்டையைச் சார்ந்த சுப்பிரமணியஞ் செட்டியார், சிட்டாளாச்சி ஆகியோருக்கு அண்ணாமலையாரின் திருவருளால் திருமகனாக அவதரித்தார். இவர் 1882 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினைந்தாம் நாள் இப்பூவுலகில் அவதரித்தார். இவருக்கு சுப்பிரமணியர் அண்ணாமலை என்று பெயர் சூட்டினார்.

இவர் இளம் வயது முதலே தெய்வீக நாட்டம் பெற்றிருந்தார். இவர் கல்வி, கேள்வி ஆகியவற்றில் சிறந்து, விளங்கினார். இளமைப் பருவம் தாண்டிய நிலையில் செல்வம் சேர்க்க அக்கால முறைப்படி திரைகடல் கடந்து சென்று பொருள் சேர்த்து வந்தார். இவருக்கு உரிய வயதில் திருமணம் செய்விக்கப் பெற்றோர் எண்ணினர். சிவஞானப் பற்றுடைய இவர் திருமண பந்தத்தைத் தவிர்க்க விரும்பினார். குலமரபு தழைக்கத் திருமணம் செய்வது அவசியம் என்று பெற்றோர் வலியுறுத்த அதனை ஏற்று திருமணத்திற்கு ஒத்துக்கொண்டார்.

அலமேலு என்ற மங்கை நல்லாளை மணம் புரிந்து இல்லறத் தொடர்பில் மகாதேவ அண்ணாமலை இணைந்தார். இருப்பினும் மனம் முழுவதும் சிவஞானம் பெறுவதை எண்ணித் தவம் கிடந்தது. சிறிது நாள்களில் பெற்றோர் வாழ்வின் நிறைவினை அடைய அவர்களுக்கும் உரிய முறையில் அண்ணாமலை மகாதேவர் நீத்தார் கடன் செய்து முடித்தார்.

இல்லறத்தின் விளைவாக அண்ணாமலை மகாதேவர் அண்ணாமலை, திருநெல்லை என்ற இருமக்களைப் பெற்றெடுத்தார். மகன் அண்ணாமலையைக் காசி என்று அழைத்து மகிழ்ந்தார் அண்ணாமலை மகாதேவர்.

## குருவருள் பெற்ற செல்வர்

குழந்தைகள் வளர்ந்து வந்த நிலையில் இவரின் அருள் நோக்கம் சிவானுபவத்தை நோக்கிச் சென்றதால், கோவிலூர் வேதாந்தப் பெருவெளி இவரை வரவேற்றது. கோவிலூரில் அருளாட்சி புரிந்து வந்த சீர் வளர் சீர் வீரசேகர சுவாமிகளிடத்தில் இவர் அருள் சீடராக அமைய இறை திருவருள் உதவியது.

இவரின் அருள் நோக்கத்தை அறிந்து கொண்ட சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் இவரை மகாதேவர் என்ற பெயருடன் தம் சீடர்களின் கூட்டத்தில் இணைத்துக் கொண்டார். இவருக்கு வேதாந்தப் பாடத்தை நடத்தினார். குருவருளின் துணையினால் திருவருளின் இயல்புகளை அறிந்து கொண்டார் மகாதேவர்.

கோவிலூர் முறைப்படி ஆண்டு ஒன்றுக்கு ஒரு நூல் கற்பிக்கவும் கற்கவும் வேண்டும். மேலும் அவ்வாண்டில் அந்நூல் மனப்பாடம் செய்து கொள்ளப்பட வேண்டும். இவ்வகையில் பதினாறு ஆண்டுகள் பதினாறு நூல்கள் என்ற நிலையில்

இவர் வேதாந்தப் பாடம் கற்றார். மேலும் ஒருமுறை பாடம் கேட்டல் மட்டும் முறைமை அன்று. மறுமுறையும் பாடம் கேட்டாக வேண்டும். இவ்வகையில் சீர்வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகளிடத்தில் வேதாந்தக் கல்வி பயின்றார்.

**ஞானவாசிட்டம் ஏடு பெற்ற செல்வர்**

கோவிலூர் மரபின்படி ஞானவாசிட்டம் ஏடு வாங்குதலையும் இவர் தன் வாழ்வில் பெற்றார். சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகளுக்கு உரிய முறையில் வழிபாடு இயற்றி இவர் அவரின் திருக்கரங்களால் ஞான வாசிட்ட ஏட்டினைப் பெற்றார். இவ்வாறு ஏடு பெறுவது என்பது வேதாந்தத்தை முறைப்படி முழுமையாக உணர்ந்ததற்கான அறிகுறியாகக் கொள்ளப்படுகிறது. இது குருவிற்குச் செய்யும் நன்றியறிதல் நிகழ்வாகும்.குருவிற்கு நன்றி செலுத்தி மகிழ்ந்தார் அண்ணாமலை மகாதேவர்.

**திருப்பணிகளுக்கு துணைநின்ற செல்வர்**

இவ்வாறு இந்நிகழ்வுகள் நடந்து வரும் வேளையில் கோவிலூர் கொற்றவாளீசர் ஆலயம், திருக்களர் பாரிஜாதவனேசுவரர் ஆலயம் ஆகியவற்றிற்குத் திருப்பணிகள் நடைபெற்றுவந்தன. அப்பணிகளுக்குத் துணைநின்றார் அண்ணாமலை மாகதேவர். இவ்வாயலங்கள் குடமுழுக்கு பெற்றன. இதன்பின் சீர்வளர் சீர் வீரசேரக ஞானதேசிகர் விவேக முக்தி பெற, ஆறாம் பட்டமாக சீர்வளர் சீர் அண்ணாமலை ஞானதேசிகர் குருபீடம் ஏற்கிறார்.

**ஈசானியம் வந்தமர்ந்த செல்வர்**

திருவண்ணாமலை ஈசானிய மடத்தின் குருமூர்த்தமாக இருக்க அண்ணாமலை மகாதேவரை ஆறாம் பட்டம் வேண்ட, அவர் மறுக்க, இருப்பினும் சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகளாக ஈசானிய மடத்தில் குருபீடம் ஏற்க வைத்தது இறைத் திருவுளம்.

அ ண் ணா ம லை க் கே க அண்ணாமலை மகாதேவர் வந்தமரச் செய்கிறார் அண்ணாமலையான். இவ்வண்ணாமலையில் பல சீடர்களுக்கு வேதாந்தப் பாடம் சொல்லி வருகிறார் சீர்வளர் சீர் மகாதேவ ஞானதேசிக சுவாமிகள். மேலும் இக்காலத்தில் ரமண மகரிஷி சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகளைச் சந்தித்து அவ்வப்போது வேதாந்த விசாரணை செய்துவருவார். மேலும் ஈசானிய மடத்தில் அவருக்கு அன்னம்பாலிப்பும் நடைபெறும். ரமண மகரிஷி தியானத்தில் அமர, குகை நமசிவாயர் ஆசிரமத்திற்கு மேற்கில் கந்தாஸ்ரமத்தை அமைத்துத் தந்தவர் சீர் வளர் சீர் மாகதேவ ஞான தேசிகர் என்பது சிறப்பிற்குரியது.

**கோவிலூர் பட்டம் ஏற்ற ஞானச் செல்வர்**

ஆறாம் பட்டமாக விளங்கிய சீர் வளர் சீர் அண்ணாமலை ஞானதேசிகர் தம் வாழ்வின் நிறைநாளை அறிந்து எண்ணி, திருவண்ணாமலை ஈசானிய மடத்தில் இருந்த சீர்வளர் சீர் மாகதேவ ஞான தேசிகரை அழைத்து, கோவிலூர் மடத்தில் ஏழாம் பட்டமாக அமைய அருள் நோக்கம் செய்தார். இதற்கான உயில் எழுதப்பட்டது. 1919 ஆம் ஆண்டு, மே மாதம் பத்தாம் நாள் இவ்வுயில் சாசனம் எழுதப்பெற்றது. இவ்வாண்டின் இருபத்தொன்றாம் நாள் ஆறாம்

பட்டம் முக்திப் பேற்றினை அடைகிறார். இதனைத் தொடர்ந்து ஏழாம் பட்டமாக சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிகராக கோவிலூர் மடத்தின் ஞான பீடமாக காலம் வரவேற்றுக்கொண்டது.

இவர் தன் வாழ்நாளில் ஏழு முறை வேதாந்தப் பாடங்களைச் சொல்லி வந்து நிறைவில் ஞானவாசிட்ட ஏடு வழங்கலை நிகழ்த்தியுள்ளார். இவர் காலத்தில் மிக அதிக அளவில் வேதாந்த சீடர்கள் பயின்றனர் என்பது எண்ணிப் பார்க்க வியப்பினைத் தரும் செய்தியாகும்.

## மடாலயத்தின் மாண்பினைப் பெருக்கிய செல்வர்

சீர் வளர் சீர் மாகதேவ சுவாமிகள் அருள், வேதாந்தக் கல்வி ஆகியவற்றைப் பெருக்கியதுடன் மடத்தின் நிர்வாகத்தையும் மேன்மைப் படுத்தினார்.

சாணானேந்தில் என்னும் கிராமத்தில் மடம், நெற்களஞ்சியம் இவர் காலத்தில் நிறுவப்பெற்றன. இவர் காலத்தில் மடத்தில் ஆயிரக்கணக்கான பேர் அனுதினமும் அன்னம் பெற்று மகிழ்ந்தனர்.

பொருள்வைத்த சேரி மடத்திற்கு வீர சண்முக சுவாமிகள், சிதம்பரம் கோ. சித. பொன்னம்பல சுவாமிகள் மடத்திற்கு சோமசுந்தர சுவாமிகள், ஈசானிய மடத்திற்கு நடேச சுவாமிகள், திருக்களர் மடத்திற்கு கிருஷ்ணானந்த சுவாமிகள் ஆகியோர் அருளாட்சி செய்துவர நியமிக்கப்பெற்றனர்.

இவர் காலத்தில் திருக்களர் சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிகரின் அருட்கோயிலுக்கு இராச கோபுரம், வெளிமண்டபம், பிரகார பத்தி போன்றன உருவாக்கப்பெற்று திருக்குடமுழுக்கு நடத்தப்பெற்றது.

## சிருங்கேரி சாரதா பீடத்தில் பெருமை பெற்ற செல்வர்

சிருங்கேரி சாரதா பீடத்தின் 34 ஆம் பட்டத்தினரான சீர் வளர் சீர் சந்திரசேகர பாரதி சுவாமிகளைக் கோவிலூருக்கு அழைத்து வந்து, கோயில் மடம் காட்டி வேதாந்தப் பெருமையை உணரச் செய்தவர் சீர் வளர் சீர் மகா தேவ ஞான தேசிக சுவாமிகள். மேலும் அவரின் அழைப்பின் பேரில் பெங்களூர் சங்கர மட சாரதாம்பாள் பிரதிஷ்டைக்குச் சென்று அங்கு சுவாமிகள் அருள் காட்சி நல்கினார்.

## நூல்கள் தந்த செல்வர்

சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் காலத்தில் பல நூல்களும் வெளியிடப்பெற்றன. சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் உரை செய்த கைவல்லிய நவநீதம் ஆறாம் பதிப்பாக 1941 ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது.

மேலும் அத்வைத சாஸ்திர மான்மிய சங்கிரகம், கைவல்லிய உக நிஷதார்த்தம், பட்டினத்தார் பாடல்கள் போன்ற பல நூல்களும் இவர் காலத்தில் வெளி யிடப்பெற்றன.

## நிறைவாழ்வு பெற்ற செல்வர்

பல தலங்களுக்குச் சென்று அருள்பெற்று வந்த சீர்வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் தன் வாழ் நாள் நிறைவின் எல்லையை உணர்ந்து 1946 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 13 ஆம் நாள் உயில் ஒன்றை எழுதினார். தன்னுடைய அறுபத்தாறாம் வயதில் 26.06.1947 ஆம் நாள் விவேக முக்தி பெற்றார்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-9

## சம்புமாலி வதைப்படலம்

(50 பாடல்கள்)



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

ஜம்புமாலி என வடமொழியிலும் சம்புமாலி எனத் தமிழிலும் பெயர் கொண்ட வீரனைப் பார்த்து, "நீ குதிரைப் படையுடன் சென்று அக்குரங்கின் வலிமையை அடக்கிக் கயிற்றால் கட்டி, என் முன் நிறுத்து" என இராவணன் சொல்ல, 'இத்தனை அரக்கர் இருக்கும் போது எனக்கு இந்தக் கட்டளையை இட்டீர்களே' என்பேறல்லவா! எனப் பணிந்து, கோபம் உருக் கொண்டாற் போலப் பாய்ந்து குதிரை மீதேறிப் புறப்பட்டான். இராவணன் அனுப்பிய சேனை தன் தந்தை பிரகத்தன் தந்த படை, நண்பர்கள் புடைசூழச் சென்றான். யானைப்படை, ஊழிக்கால கார்மேகங்கள் ஒன்று சேர்ந்து வந்தாற் போல முன்னே செல்ல கொடிகள் அசையும் தேர்கள் பின்னே வந்தன. காற்றுக்கு நான்கு கால்கள் அமைத்தாற் போன்ற கடுவேகக் குதிரைகளும் சென்றன.

### ஆயுதங்கள்

போரில் பயன்பட்ட ஆயுதங்கள் இத்தனையா என வியக்க வைக்கிறது கம்பன் பாடல். தோமரம், உலக்கை, கூரியவாள், சுடர்வீசும் கோடாலிகள், வச்சிராயுதம், அங்குசம், கூரியவேல், சக்கரம், நெருஞ்சிமுள்படைகள், தண்டாயுதம், இரும்புத்தண்டுகள், வில், பாசக்கயிறு, பெரியமரங்கள், வளையங்கள், அம்புகள், வேல்கள், எறியீட்டிகள், இரும்புத்தடிகள் ஆகிய கருவிகளை ஏந்தியவாறு அரக்கர் படைசென்றது. பலவகை இசைக்கருவிகள், போர்ப்பறைகள், சங்குகள் முழங்கின. தேர்ச்சக்கரங்களின் ஓசை, குதிரைகளின் கனைப்பொலி, யானைகளின் பிளிறல் என ஒரே ஆரவாரமாகப் படை சென்றது.

கொடியவனான சம்புமாலியின் வண்ணத்தேரைச் சுற்றிப் பத்தாயிரம் யானைகள், இருபதாயிரம் தேர்கள், நாற்பதாயிரம் குதிரைகள், எண்பதாயிரம் காலாட்படையினர் சென்றனர். (ஒரு குரங்கை எதிர்க்க!) தேரிலிருந்த வீரர்கள் தனுர்வித்தையில் தேர்ந்தவர்கள். வரம் பல பெற்றவர். வைரம் பாய்ந்த தோளினர்.



கல்லொத்த மார்பில் பொன் கவசம் பூண்டவர்!

யானைப் பாகர்களே அழகும் ஆற்றலும் மிக்கவர்! நெருப்புப் பொறி பறக்கும் விழியினர். குதிரை வீரரும் போரில் குதிரையின் பதினெட்டுச் சாரிகளையும் அறிந்து செலுத்தும் திறமை படைத்தவர்.

அசோகவனத்தில் தோரணவாயிலில் நம் ராம பக்த ஆஞ்சனேயன் போரிட அரக்கர் இன்னும் வரவில்லையே என எதிர்பார்த்து அமர்ந்திருந்தான். அரக்கர் அஞ்சும்படி பெருமுழக்கம் செய்தான். தோள்களைத் தட்டினான். அரக்கப்படை வழியில் கிடந்த பிணங்களைத் தாண்ட முடியாமல் இடறி விழுந்தனர். இருபகுதிகளாகப் படையைப் பிரித்து அனுப்பிய சம்புமாலி, அனுமனுக்கு நேரே வந்தான். அனுமன் ஒருவனே, போர்ப்படை போலத் தன்னை நினைத்துக் கொண்டு தயாரானான். தன் மீது வீசப்பட்ட ஆயுதங்களைக் கையால் ஒடித்துக் கடலில் வீசினான். அருகிலிருந்த இரும்புத் தூண் ஒன்றை எடுத்துக் கொண்டான். தோரணவாயிலிருந்து இறங்கினான், நிமிர்ந்து நின்றான், திரிந்தான், போர் புரிந்தான், இரும்புத்தடியில் அரக்கரைத் தாக்கினான். யானைகள் துதிக்கை அற்று வீழ்ந்தன. தேர்ச்சக்கரங்கள் பொடிப் பொடியாயின! குதிரைகளோ,

‘ஒடிந்தன உருண்ட உலந்தன புலந்த
இடிந்தன எரிந்தன நெறிந்தன எழுந்த
மடிந்தன மறிந்தன முறிந்தன மலைபோல்
படிந்தன முடிந்தன கிடந்தன பரிமா (பா 842)

காலாட் படையினரோ சிலர் கண்ட மாத்திரத்தில் அஞ்சி விழுந்தனர். சிலர் அனுமனைப் பாராட்டினர். சிலர் மயங்கி விழுந்தனர். சிலர் போரிட்டு இறந்து நிலத்தில் விழுந்தனர். அனுமன் பிரளய காலத்து இடி போல் குதித்தான். போர்க்களத்தில் காற்றாடி போலத் திரிந்தான்; சுழன்றான். தன்னுடைய படை நிலை குலைந்து அழிவது கண்ட சம்புமாலி தனியே, இரத்த ஆற்றிலே தேரில்வர, சகதியில் சக்கரம் புதையுண்டது. அனுமன் அவனெதிரே நின்று, உன் சேனையைக் காக்க வழியற்றவனே! உன் தேர் ஒன்றே உளது உயிர்பிழைத்துப் போ என்றான். இது போர் அறம். ‘உன் கருணை அருமை! எனக்குத் தேவையில்லை போடா!’ என அம்பு மழை பொழிய, அனுமன் அவனது தேரில் பாய்ந்து, வில்லைப் பற்றி வீசினான்.

சம்புமாலியின் தேர்ப்பாகனை, சம்புமாலியைக் காலால் மிதித்துக் குழம்பாக்கினான். இரத்தப் பேராறு இறந்த அரக்கர் உடல்களை இழுத்துக் கரை ஒதுக்க, அரக்கியர் கதறி அழ அறக்கடவுள் உள் மகிழ்ந்தான்!

அரண்மனைக்குள் சென்ற தேவர்கள், நமர் எல்லாம் அழிந்தனர். சம்புமாலியும் இறந்தான். ஒரே குரங்கு தான் போரிட்டது

என இராவணனின் விழிகளில் இரத்தக் குமிழிகள் வெளிப்பட்டன.

### பஞ்ச சேனாபதிகள்

### வதைப்படலம் 67 பாடல்கள்

இராவணனது மனநிலையைப் புரிந்து கொண்ட பஞ்ச சேனாபதிகளாம் (ஐந்து சேனைத் தலைவர்கள்) விரூபாட்சன், யூபாசன், துர்த்தரன், பிரகசன், பாசகர்ணன் என்ற ஐந்து மாவீரர்கள் வந்து நின்று “சிலந்தியைப் பிடித்துத் தின்னும் குரங்கு அது. அதை எதிர்க்க நீங்கள் போவது சரியா! வலிமை மிக்க கருடன் நீர்! கொசு அவன். அவனை நீர் எதிர்க்கப் போவதா? நம் வலிமை அழிந்து விட்டதெனத் தேவரும் மூவரும் சிரிக்கமாட்டார்களா? அந்தக் குரங்கைப் பிடித்து வருவோம் எங்களை அனுப்புங்கள்” என்றனர். இராவணன் இசைவு தந்ததும் அவர்கள் நெற்றித் திலகம் நிலத்தில் படும்படி வணங்கி விடைபெற்றனர்.

கடல் போல் அரக்கர் சேனை வந்து சேர்ந்தது மேகங்களைக் குத்துவது போல் கொடிகள் பறந்தன. யானைகளின் மதநீர் ஆறு போலப் பெருகி ஓடியது. சுடர்விடும் ஆயுதங்கள் ஒன்றோடொன்று மோதி நெருப்புப் பொறிகள் பறந்தன.

### அரக்கிகள் தடுத்தனர்

குரங்குடன் போரிடச் சென்ற நம் அரக்க வீரர் ஒருவர் கூடத் திரும்பி வரவில்லையே! போகாதீர்கள்! என அரக்கிகள் தடுத்தனர். பஞ்ச சேனாபதிகள் சேனை வீரர் இப்பெண்களின் சொற்களை மதிக்கவில்லை! இந்திரனுடைய குலிசம், வருணனின் பாசக்கயிறு, யமனுடைய தண்டாயுதம், சிவனாரின் சூலம் எதுவும் ஒரு சிறுவடுவும் செய்ய முடியாத தோள் படைத்தவர் இந்த ஐந்து சேனாபதிகள்!

இராவணன் திசை யானைகளை வென்ற போது போரில் உடன் நின்று வீரதீரச் செயல் புரிந்தவர் பஞ்சசேனாபதிகள். மலையை இகழும் மார்பினர், கடல் அலையை இகழும் தோளினர். எமனை இகழும் கொலைத் தொழிலினர். கொல்லனது ஊதுலையை இகழும் கனல் கக்கும் கண்ணினர். சேனையின் அளவையும், பஞ்ச சேனாபதிகளின் ஆற்றலையும் பார்த்த தேவர்கள் இரக்கம், பயம், கவலையடைந்தனர். அரக்கர்களோ, சிறிய கலையையுடைய இக்குரங்குகள் இத்தனை அரக்கர்களை மாய்த்தது என ஐயம் கொண்டனர்.

ஓர் இரும்புத் தூணைக் கையில் எடுத்துக் கொண்ட அஞ்சனை புதல்வன், அரக்க வீரர்கள் அவர்களது ஆயுதங்கள், குதிரைகள், தேர்கள், யானைகள் எல்லாம் நிலத்தில் விழ அடித்து நொறுக்கி எறிந்தான்.

துர்த்தரன் என்ற (ஐவரில் ஒருவன்) தலைவனை அனுமன் இரும்புத் தூணால் அடித்துக் கொன்றான். விருபாட்சனை மிதித்தே கொன்றான். மற்ற மூவரும் சினம் கொண்டு சரங்களை விட்டனர். சிறிதும் தளராத யூபாட்சன், பிரகசன் இருவரையும் கால்களைக் கைகளை வாலால் கட்டி முறித்தான். இறந்தே விழுந்தனர் இருவரும். பாசகர்ணன் மீது சிங்கம் போலப் பாய்ந்த அனுமன் தேரோடு அவனைப் பூமியில் அழுத்திக் கொன்றான். ஐவரும் வீரமரணம் அடைந்தனர். நஞ்சனைய அரக்கர் ஐவரும் அனுமன் ஒருவனாலேயே கொல்லப்பட்டனர். தசமுகனின் செவிகள் தீய்ந்து போகும்படி இந்தச் செய்தியைக் காவல் வீரர் சொல்ல, என்ன! அக்குரங்கு அங்கே தானிருக்கிறதா! என இடிந்து போய்க் கேட்டான் இராவணன்!

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 5

## எழுச்சிப் பாதையில் இரண்டு திருத்தலங்கள் ஆறைவடதளி மற்றும் திருமறைக்காடு

என்பலாற் கலனுமில்லை எருதலால் ஊர்தலில்லை
புன்புலா னாறு காட்டிற் பொடியலாற் சாந்து மில்லை
துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழு தாடிப் பாடும்
அன்பலாற் பொருளுமில்லை ஐயன் ஐயனார்கே
(04.40.06)

திருநாவுக்கரசரின் திருவையாற்றுப் பதிகம், 'அன்பலாற் பொருளுமில்லை' என்று பத்திமையின் அடிப்படையாக அன்பையே வலியுறுத்துகிறது. 'தொண்டர் கூடித் தொழுதழு தாடிப்பாடுவது' இறைவன்பால் அன்பை வெளிப்படுத்தும் முறையென்றும் திருத்தமாய்ச் சொல்கிறது. இறையன்பே வாழ்வானபின், பணிவுகுழைவுஉருக்கம் நெகிழ்ச்சிஅமைதி எனப் பல்வேறுணர்வுகள் கண்முன் வருவதியல்பு. ஆனால், அன்பை அடித்தளமாகக் கொண்ட பத்திமைப் பண்பாளராக மட்டுமல்லாமல், சமூக முறைகேடுகளை எதிர்த்துக் குரலெழுப்பிய பெரும்புரட்சியாளராகவும் விளங்கிய ஏற்றமும் சீற்றமும் நிறைந்த வாழ்க்கை அப்பருடையது. பத்திமையால் விளைந்த நம்பிக்கையையும் மனவுறுதியையும், தொண்டர்களுக்கெனப் போராடும்




**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி


கருவிகளாக மாற்றிக்கொண்டவர் அவர்.

அப்பரால் சைவந்தழுவிய முதலாம் மகேந்திரர், மறுமலர்ச்சியாளர் என்பதைக்

குறிக்கும் ‘மறுமாற்ற’ என்ற சிறப்புப் பெயரால் போற்றப்பட்டதை முந்தைய கட்டுரையொன்றில் (‘அப்பரும் மகேந்திரரும் பண்பாட்டுப் புத்து யிர்ப்பில் இரு ஆளுமைகள்’) கண்டோம். திருநாவுக்கரசரோ தாண்டகவேந்தர் என்று போற்றப்படுபவர். தாண்டகப்பா அமைப்பில் ‘நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்... பணிவோம் அல்லோம்’ என்று மன்னரையெதிர்த்து அடிமையுணர்வை உடைத்தெறிந்த அப்பரின் திருப்பதிகத்திற்கு ‘மறுமாற்றத் திருத்தாண்டகமென்றே’ பெயரிடப்பட்டது எவ்வளவு பொருத்தம்!

பதிகத்தில், துகிலுடுத்துப் பொன்பூண்டு திரியும், பாராண்டு பகடேறி வரும் படையுடைய அரசனின் சொற்கேட்கவும் பணிகேட்கவும் ஆணைகேட்கவும் மாட்டோமென்று துணிந்து நிற்கும் அப்பரைக் காணமுடிகிறது.



ஆடவல்லான், திருநல்லம்

பத்திமையால் விளையும் பல்வேறு பண்புகளில் துணிவு தலையாயது என்பதைத் தொடர்ந்து பறைசாற்றுவன அவருடைய சிவநெறி வாழ்வின் நிகழ்வுகள். அதனால்தான், சமணர்களின் வெறுப்புணர்வால் அப்பர்மேல் மன்னர் யானையை ஏவியபோதும், ‘அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதுமில்லை’ என்று துணிந்து நின்றார் அவர். அந்தத் துணிவே அவரைப் புரட்சிமிகு பெருஞ்செயல்கள் செய்யவைத்ததென்பதைக் காட்டும் இரண்டு நிகழ்வுகளை இங்கு பார்ப்போம்.

நாவுக்கரசர் பாடிய திருத்தலங்களில், தனிச்சிறப்புடன் மாறுபட்டு நிற்கும் இரண்டு திருத்தலங்கள் ஆறை வடதளி மற்றும் திருமறைக்காடு. இத்தலங்களைச் சார்ந்த கதைத் தொகுப்பு பல்வேறு சமூகச் செய்திகளைத் தாங்கி நிற்பதை நாம் உணரவேண்டும். சங்க காலந்தொடங்கி இருபத்தோராம் நூற்றாண்டுவரை, தமிழுலகம் படித்துச் சுவைக்கும் இலக்கியப் படைப்புகளில் அடங்கியிருக்கும் வரலாற்றுக் குறிப்புகள் ஏராளம் ஏராளம். அதிலும், பத்திமைப் பதிகங்களில் இறையுணர்வோடு இணைத்துத் தரப்பட்டுள்ள பல்வேறு தகவல்களை உற்றுநோக்கின் வரலாறு தெளிவுபடும்.

## பழையாறை வடதளி உண்ணாமைப் போராட்டத்தின் முன்னோடி அப்பர்

இந்திய அளவில் சமூக மாற்றங்களுக்காக உண்ணாநோன்பிருந்தவர்களைப் பட்டியலிட்டால், இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட காந்தியடிகள், வீரர் பகத்சிங், ஜதின் தாஸ் என்று பரவலாகப் பெயர்கள் கிடைக்கும். சமீப காலங்களில், மணிப்பூரில் ஐரோம் சானு ஷர்மிளாவும் லேலடாக் பகுதியில் சோனம் வாங்சுக்கும் தத்தம் மாநிலங்களுக்காக

உண்ணாநோன்பிருந்ததும் அறிவோம். இவை இருபது மற்றும் இருபத்தோராம் நூற்றாண்டுகளின் நிகழ்வுகள்.

உலகளவில் பார்த்தால், ஆலிஸ் ஸ்டோக்ஸ் பால் என்ற அமெரிக்கப் பெண்மணி, பெண்களின் வாக்குரிமைக்காகப் போராடிய சமூக ஆர்வலர். மேற்படிப்புக்காக இங்கிலாந்துக்குச் சென்றவர், 1909இல் பெண்களுக்கு வாக்குரிமை கோரி ஈடுபட்ட போராட்டத்தில் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையிலிருந்தபடி, வெளியில் வரவும் மீண்டும் பெண்களுக்கான சீர்திருத்தப் போராட்டங்களை நடத்தவும் அவர் கையிலெடுத்த ஆயுதம்தான் உண்ணாநோன்பு.

ஆனால் ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தில் சிவனடியார் ஒருவர், கோயில் மீட்டெடுப்பைக் கையிலெடுத்து அதன்பொருட்டு உண்ணாநோன்பிருந்தது இன்றளவிலும் போதிய வெளிச்சம் பெறாத புரட்சி வரலாறு. “கதவடைப்பில் தொடங்கி ஒத்துழையாமை வரை எத்தனையோ போராட்டங்களைக் கண்ட தமிழ்நாட்டில், உண்ணாநோன்பை பொதுநோக்கிலமைந்த ஓர் அறப்போராக, ஆதிக்கம் நீக்கக் கைக்கொள்ளப்பட்ட அமைதிப் போர்முறையாக முதன்முதல் மேற்கொண்ட பெருமை அப்பர் பெருமானையே சாரும்,” என்கிறார் டாக்டர் இரா. கலைக்கோவன் (அப்பர் என்னும் அரிய மனிதர் 1; வரலாறு. காம்).

பழையாறை நகருக்கு அப்பர் சென்றபோது, அங்கிருந்த சைவக்கோயிலைச் சமணர் மறைத்திருந்ததையும் அங்கிருந்த விமானம் ‘அமணர் பொய்கொள் விமானம் எனவும் கேட்டுப் பொறாத உள்ளம் மிகப்புழுங்கினார்’, என்கிறார் சேக்கிழார். மனம் புழுங்கிய அப்பர், பொதுவில் தொண்டர் எவரும் செய்யும் செயலை முதலில் செய்தார் ‘வஞ்சனை செய்த சமணர் திறத்தை அழிக்கவேண்டும்’ என்று இறைவனை வணங்கினார். அடுத்ததாக நாவுக்கரசர் செய்ததுதான் அடியார்களில் சமூகப் புரட்சியாளராக அவரை இன்றும் ஒளியூட்டிக் காட்டுவதாக அமைகிறது.

வண்ணங் கண்டு நான்உம்மை
வணங்கி யன்றிப் போகேனென்
றெண்ண முடிக்கும் வாகீசர்
இருந்தார் அமுது செய்யாதே (12.21.296)

‘இறைவா, உம் திருத்தோற்றத்தைக் கண்டு வணங்கியபிறகே இங்கிருந்து போவேன்,’ என்று ‘அமுது செய்யாதே’ உறுதியுடன் உண்ணாநோன்பிருந்தார் அப்பர். இவ்விடத்தில் சேக்கிழார், ‘எண்ணமுடிக்கும் வாகீசர்’ என்று எண்ணியதை முடிக்கும் நாவுக்கரசரின் மனத்திண்மையை வியந்தோதுவது குறிப்பிடத்தக்கது. அதனால்தான், உண்ணாநோன்பிருந்து மீண்டும் சைவத்திருத்தலமாக ஆறைவடதளி மாறியபின்னரே அங்கிருந்து கிளம்பிச் சென்றார் அவர்.

திருப்பழையாறை வடதளியைப் பாடிய பதிகம் முழுதும் அப்பர், சைவக்கோ யிலை வழிபாடின்றி மறைத்த சமணர்கள் குறித்தே பேசுகிறார். கூடுதலாக, ‘வாயிருந் தமிழே படித்தாளுறா ஆயிரஞ் சமணும் அழிவாக்கினான்,’ என்று தமிழால் இறைவனைப் பாடுவதை வலியுறுத்தும் மொழியார்வலராகவும் தம்மை வெளிப்படுத்திக் கொள்கிறார்.

உடல் வருத்தி ஊனால் உயிரால் திருத்தொண்டின் நெறிவாழ வந்த வாகீசர், தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனைப் போலவே நாமார்க்கும் அடிமையல்லோம் என்று ஓங்கிப் பாடியது பதிகத்திற்காக மட்டுமல்ல; சமூக நலனுக்காகவும் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனியெனக் காட்டுவது ஆறை வடதளிப் போராட்டம். அப்பர் நிகழ்த்திய இதுவே நாமறிந்தவரையில், இந்தியத் துணைக்கண்டத்தின் முதன்முதல் உண்ணாமைப் போராட்டம்.

## திருமறைக்காடு பல்லோர் புகுவாயிலாக மாறிய பூட்டிய மறைக்கதவம்

அப்பரும் சம்பந்தரும் இணைந்துச் செய்த மக்கள் நலப்பணி, திருமறைக்காட்டில் அதுவரையில் மூடியிருந்த கோயிலின் நேர்வாயில் கதவினைப் பல்லோர் புகுவா யிலாகத் திறக்கச் செய்ததாகும். இருவரும், திருமறைக்காட்டின் தெருக்களில்




மக்கள்கூடிச் சேர்ந்துவர நடந்து, செழிப்பான திருமாளிகை முன்னிருந்த கோபுரத்தைத் தாழ்ந்து வணங்கி உள்ளே சென்று, 'மறை அருச்சித்துக் காப்புச் செய்த பைம்பொன்மணித் திருவா யிலருகே' வந்தனர் (12.28.579).

மறைகள் ஓதும் அன்புடை அடியார்கள் வந்து முயன்றும், பூட்டிய கதவு திறக்கவில்லை என்றும், அதனால் வேறொரு வாயிலமைத்து அதன்வழியே இறைவனை வணங்கும் நிலையிருந்ததுமறிந்து வியப்புற்றார் ஞானசம்பந்தர். அப்பரை நோக்கி, "மறைக்காட்டிறைவரை நாம் நேர்வா யிலைத் திறந்து புகுந்து எப்படியாகிலும் வணங்கவேண்டும். திருக்காப்பு நீங்கிட வளமான தமிழால் பாடியருளுங்கள்," என்று வேண்டினார். அவ்வண்ணமே நாவுக்கரசர், 'பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடத் தொடங்கினார்.

பதிகம் முழுதும் 'கண்ணினாலுமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே; நீண்டமாக் கதவின்வலி நீக்குமே; உமை நோக்கிக் காணக் கதவைத் திறவுமே' என்று பலவாறாக இறைவனிடம் கதவு திறக்குமாறு வேண்டுகிறார் அப்பர். அடுத்து, 'எந்தை நீ அடியார் வந்திறைஞ்சிட இந்த மாக்கத வம்பிணி நீக்குமே,' என்று அடியவர்களுக்காக விண்ணப்பித்தார் அவர். வாகீசரின் பைந்தமிழில் மயங்கிக் கிடந்த சிவபெருமான் மறைக்காட்டின் பைம்பொன் கதவைத் திறக்க மறந்தார்போலும். பத்துப் பாடல்கள் நிறைவுற்றபின்னும் கதவின் காப்பு நீங்கவில்லை.

பத்திமையில் அஞ்சாமையும் துணிவும் அப்பரிடம் நாம் கண்ட பெரும்பண்புகள்

அன்றோ?

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்

இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே (05.10.11)

என்று, 'இராவணனை விரலால் அடக்கிய நீர் என்னிடத்தில் இரக்கமில்லாதவராக இருக்கின்றீர்,' என்று பொறுமையிழந்து சிறிதே சினங்காட்டினார். அப்பர் இந்தத் திருக்கடைக்காப்பைப் பாடியதும் பைம்பொன் கதவின் திருக்காப்பும் திறந்ததென்று சேக்கிழார் அழகுற விளக்குகிறார்.

கதவு திறந்தபின் ஏற்பட்ட மகிழ்வைச் சேக்கிழார் விவரிக்கும் பாங்கு நம்மை மேலும் சிந்திக்கத் தூண்டுகிறது. திருஞானசம்பந்தர் புராணத்தில் மறைக்காட்டுக் கதவின் திருக்காப்பு நீங்கியபின்னர், பதினொரு பாடல்களை (582–592) கோயிலுள் உட்புகுந்த மக்களின் ஆரவாரத்திற்கும் பேருவகைக்கும், தேவார முதலிகளின் கண்ணீர் மல்கிய நெகிழ்வுக்கும், அப்பர்சம்பந்தரின் வரம்பிலாப் பெருமைக்கும் ஒதுக்கியுள்ளார் சேக்கிழார்.

வேதங்கள் காப்பு செய்து பூட்டப்பட்ட கோயில் நேர்வாயிலை, அப்பர் பெருமான் வண்டமிழால் பாடித் திறக்கச் செய்தார். 'பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்தென் சிந்தைமயக்கறுத்த திருவருளினானை' என்று திருச்செங்கட்டாங்குடி ஐயனை அப்பர் போற்றியதும் தம்மை தமிழ்மாலை பாடச்செய்த அருளுக்காகத்தானே! தாமறிந்த மொழியாலே இறைவன் தாள் பணியவும், தாய்மொழிவழி இறைவழிபாட்டை வலியுறுத்தவும், மறைகள் விதித்த கட்டுப்பாடுகளை வீழ்த்தி வேறுபாடின்றி அனைவரும் புகுமிடமெனக் கோயில்வாயில் திறக்கவும் துணிவுடன் நின்ற நாவுக்கரசரின் எழுச்சிப் போக்கை அழுத்தமாக உரைப்பது திருமறைக்காட்டு நிகழ்வு.

அதனால்தான், இப்பெருநிகழ்வைப் போற்றவரும் சேக்கிழாரும், வேதங்களால் பூட்டப்பட்ட கதவு தமிழ் பாடித் திறந்ததும், பற்பல ஆண்டுகளாகக் காத்திருந்த எளியோரும் அடியாரும் கோயிலுள் நுழைந்தெழுப்பிய ஆரவாரம், அண்டங்களெல்லாம் மூழ்கும்வண்ணம் ஆர்ப்பரித்ததாக மகிழ்கிறார்.

ஆடியசே வடியார்தம் அடியார் விண்ணோர்

ஆர்ப்பெழுந்த தகிலாண்டம் அனைத்தும் மூழ்க (12.28.582)

அடியார்களின் ஆரவாரத்தோடு கோயிலுள் நுழைந்த அப்பரும் சம்பந்தரும், அதுவரையில் புறவாயில் வழி மட்டுமே கோயிலுள் புகுந்த நிலைமாறி, 'கொற்றவர் கோயில் வாயில் நேர்வழியில்' புகுந்தனர். அடுத்த இரண்டு பாடல்களும் கோயிலில் நேர்வழியில் புகுந்த அவர்களின் அடக்கவியலாத உணர்ச்சிப் பெருவெள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. கோயிலுட் புகுந்து தம்பிரானைக் கண்டவர்கள், உச்சி குவித்த செங்கைகளோடு கண்களில் அருவிபோல் நீர்பாய மெய்சிலிர்த்து விழுந்து வணங்கிச் சென்றனர்.

அடுத்து, 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்' என்ற வள்ளுவர் குறளை எடுத்தாள்கிறார் சேக்கிழார். அளவற்ற அன்பால் ஆனந்த வெள்ளத்துள் மூழ்கி, எலும்புமுருக நோக்கி விழுந்தெழுந்து, இறைவன்முன் நிற்க இயலாது நிலையும் மொழியும் தடுமாறி, பதிகங்கள் பாடினர் அவர்கள் இருவரும். ஒரு

பெரும்போராட்டத்தின் இறுதியில் ஏற்பட்ட மாபெரும் சீர்திருத்தமே இத்தனை விளக்கங்களுடன்கூடிய வண்ணனைக்கான உந்துதல்.

இதை மேலும் உறுதிசெய்வது, சேக்கிழாரின் அடுத்த பாடல்.

அத்திரு வாயில் தன்னில் அற்றைநாள் தொடங்கி நேரே
மெய்த்திரு மறைகள் போல மேதினி புக்குப் போற்ற
வைத்தெதிர் வழக்கஞ் செய்த வரம்பிலாப் பெருமை யோரைக்
கைத்தலங் குவித்துத் தாழ்ந்து வாழ்ந்தது கடல்சூழ் வையம். (12.28.589)

அன்றுமுதல், மறைகளைப் போலவே நேர்வாயில் வழியாகக் கோயிலுள் புகுந்து உலகத்தோரும் வணங்குமாறு செய்ததோடு, எதிர்காலத்திலும் இதே வழக்கு தொடருமாறு செய்த வரம்பிலாப் பெருமையுடைய வாகீசரையும் சம்பந்தரையும் கைகூப்பி வணங்கியதாம் கடல் சூழ்ந்த உலகம். கோயிலுள் புகுவது அனைவருக்கும் உரியதல்ல எனத் தடுத்த சமூகப் பாகுபாட்டைத் தகர்த்தெறிந்த அவ்விருவரது மேன்மைப் பண்பை நெடுநேரம் எண்ணிவியக்கத்தான் சேக்கிழார் திருமறைக்காட்டிற்கெனப் பல பாடல்கள் அருளினார் என்பதில் ஐயமுமுண்டோ?

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

துணைநூல்கள்

1. சேக்கிழார், பெரிய புராணம்

2. டாக்டர் இரா. கலைக்கோவன், அப்பர் எனும் அரிய மனிதர், பகுதி 1,2,3; வரலாறு.காம்

# திருமந்திரம்

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகம் சூடக்
குருபத்தி செய்யும் குவலயத் தோர்க்குத்
தரு முத்திச் சார்பு ஊட்டும் சன்மார்க்கம் தானே.

**விளக்கம்:**

சிவபெருமானின் திருவடிப்பேறு சிவகுருவின் வழிகாட்டலால் கிடைக்கப்பெறும். அந்தப் பெரிய பேற்றினைப் பெற சிவகுருவினைக் காணல் வேண்டும். வழிபட வேண்டும், இடையறாது எண்ண வேண்டும். அவர்தம் திருவடி யினைத்தொட்டு வணங்க வேண்டும். சிவகுருவின் பொருள்சேர் புகழினை வாயாரப் புகல வேண்டும். சிவகுருவின் திருவடி யிணையினைத் தம்முடிமேல் சூடுவதால் முக்தி நெறி கிடைக்கப்பெறும்.

***********

தெளிவு அறியாதார் சிவனை அறியார்
தெளிவு அறியாதார் சீவனும் ஆகார்
தெளிவு அறியாதார் சிவம் ஆக மாட்டார்
தெளிவு அறியா தவர் தீரார் பிறப்பே.

**விளக்கம்:**

திருமுறைகள் போன்ற நல்ல நூல்களைக் கற்காதவர்கள், அவற்றின் வழியாக முப்பொருளின் மெய்ம்மை தெளியாதவர்கள் சிவனை உணரார். சிவனை உணராத காரணத்தினால் இப்பிறவியின் பயனை அவர்கள் பெற மாட்டார்கள். மறுபடி மறுபடி பிறப்பார்கள். பிறவிப் பயனைப் பெறாத காரணத்தினால் அவர்கள் அறிவுடையவர்களும் ஆகமாட்டார்கள். அறிவு தெளியாதவர் சிவன் திருவடியிணை யினைக் கூடிச் சிவமாம் பெருவாழ்வு எய்தார். மெய்ம்மை தெளியாதார் பிறப்பறார்; சிறப்பு உறார்.

# இருண்ட காலமா?

பகுதி–3

**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

## களப்பிரர் சான்றுகளும் கேள்விகளும்

பொ. கா. 2ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டனவாகக் கிடைக்கும் பாண்டிமண்டலத்துத் தமிழ்பிராமி கல்வெட்டுகளின் எண்ணிக்கையோடு (89) ஒப்பிடும்போது களப்பிரர் காலப் பதிவுகளாக விரல்விட்டு எண்ணும்படியான கல்வெட்டுகளே அங்குக் காணக்கிடைக்கின்றன. மகாதேவன் பதிப்பித்துள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகளில் ஒன்று மட்டுமே பாண்டியர் பகுதி சேர்ந்தது. மதுரையைக் கைப்பற்றி மூன்று நூற்றாண்டுக் காலம் அதையாண்ட களப்பிரர்கள், வரலாற்றாசிரியர்கள் குறிக்குமாறு சமணசமயத்தினர் எனில், அவர்கள் வருகைக்கு நான்கு நூற்றாண்டுகள் முன்பாகவே மதுரையில் செழித்திருந்த சமணம் களப்பிரர் ஆட்சிக்காலத்தே உச்சத்தைத் தொட்டிருக்க வேண்டும். ஆனால், பாண்டியர் பகுதியில் களப்பிரர் ஆட்சிக்காலத்தே சமண எழுச்சி யிருந்ததைக் காட்டும் சான்றுகள் எதையும் காணக்கூடவில்லை.

களப்பிரர் வருகைக்கு முன் தாமாகவே சமணமுனிவர்களை ஆதரித்து, அவர்களுக்கு வாழ்விடங்களைச் செய்து தந்த தமிழ் மன்னர்களும் மக்களும் களப்பிரர் காலத்தில் அப்பணி துறந்தமைக்குக் காரணம் யாது? களப்பிரர் வேற்றுநாட்டவர் என்பதால் மக்கள் அவர்களைப் புறக்கணித்ததாகக் கொண்டாலும் சமணர்களான களப்பிரர்கள் ஏற்கனவே வழக்கில் இருந்த கொடைமரபுகளைத் தாங்களேனும் தொடர்ந்திருக்கலாம் அல்லவா? மதுரையிலோ அதன் சுற்றுப்புறங்களிலோ இக்காலம் சார்ந்த கட்டுமானங்களோ, வேறுவிதமான சான்றுகளோ இது நாள்வரை அறியப்படாமை எண்ணத்தக்கது. பாண்டிநாட்டில் பாடல் பெற்ற தலங்கள் குறைவாக இருப்பதற்கும் அப்பகுதி ஏற்கனவே சமணம் வயப்பட்டிருந்தமைதான் காரணமாக இருக்கமுடியுமே தவிர, களப்பிரர் அவற்றை அழித்ததாகக் கொள்வது எங்ஙனம் பொருந்தும்? பூலாங்குறிச்சிக் கல்வெட்டு இரண்டு தேவகுலங்களைக் குறிப்பதும் இங்கு எண்ணத்தக்கது.

களப்பிரர் பாண்டிமண்டலத்தைக் கைக்கொண்டமை குறிப்பிடும் வேள்விக்குடிச் செப்பேடு அவர்களை வென்று பாண்டியர் ஆட்சியை மீளவும் மதுரையில் தோற்றுவித்த கடுங்கோனைக்

குறிப்பிடுகிறதே தவிர, களப்பிரர் குறித்த வேறெந்தத் தகவலும் தரவில்லை. காலத்தால் மிகப் பிற்பட்ட தான கல்லாடம் என்னும் இலக்கியமே, ‘படைநான்கு உடன்று பஞ்சவன் துறந்து மதுரை வவ்விய கருநடர் வேந்தன் அருகர்ச் சார்ந்து அரன்பணி அடைப்ப’ என்று களப்பிரர் யார், அவர்தம் சமயம் என்ன, அவர்கள் சைவத்திற்கிழைத்த தீங்கு எனச் செய்தி களைச் சேர்த்தளித்துள்ளது. சேக்கிழார் பெரியபுராணத்தில் இதை விரித்துப் பேசுகிறார். இவ்விரு செய்திகளுமே களப்பிரர் ஆட்சி முடிவுற்ற காலத்திற்கு ஆறு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் உருவாக்கப்பட்டவை. இவற்றை விலக்கிப் பார்த்தால் களப்பிரர்களின் சமயத்தை நிறுவுவதற்கோ, அவர்கள் சைவ வழிபாட்டைத் தடுத்தமைக்கோ வேறு சான்றுகள் இல்லை.

புத்தசமய இலக்கியமாகப் பதிவாகியுள்ள புத்ததத்தரின் அபிதம்மாவதாரம், புகார் நகரத்தையும் அதைச் சூழ்ந்திருந்த சோழநாட்டையும் அச்சுதவிக்கந்தன் என்ற களப்பிர மன்னன் ஆண்டதாகக் குறிப்பிடுகிறதென்று கூறும் திரு. நடன. காசிநாதன், புத்ததத்தர், தம்முடைய மற்றொரு நூலான வினயவினிச்சயத்தில் தாம் சோழநாட்டுப் பூதமங்கலத்தில் வேணுதாசர் அமைத்த விகாரையில் தங்கியிருந்தபோது களப்ப குல மன்னர் அச்சுதவிக்கந்தன் ஆட்சியில் அந்நூலை இயற்றியதாகக் கூறுவதாகவும் பதிவுசெய்து, இந்த புத்ததத்தரின் காலத்தைப் பொ. கா. 5ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகக் கொள்கிறார். புத்ததத்தரின் சமகாலத்தவராகிய புத்தகோசரும் தம் நூலில் சோழநாட்டை ஆண்ட களப்பிர அரசர் ஒருவரைப் பற்றிக் குறிப்பிடுவதாக நடன. காசிநாதன் கூறுகிறார். இச்சான்றுகள் சங்கச் சோழர்களின் துறைமுகமாக இருந்த புகார்ப்பகுதியில் களப்பிரர் ஆட்சி இருந்தமையை உறுதிப்படுத்தினாலும் மன்னரின் சமயம் குறித்து அமைதி காக்கின்றன.

## குறளும் சிலம்பும்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் தலைமையானதான வள்ளுவரின் குறள், சங்கம் மருவிய கால இலக்கியமாகப் பல தமிழறிஞர்களால் நிறுவப்பட்டுள்ளது. அரசு, அரசுசார்ந்த சமுதாயம் குறித்த மிகத் தெளிவான சிந்தனைகளை முன்வைக்கும் இந்நூல் களப்பிரர் காலத்தில் எழுதப்பட்டதென்பது அக்காலத்திருந்த கருத்துரிமைக்குச் சான்றாகும். சங்க கால அரசியல், வாழ்வியல் சிந்தனைகளின் வளர்நிலைகளையும் முதிர்ச்சியையும் குறளில் காணமுடிகிறது. சங்க வாழ்க்கைக்கு நேரெதிரான சில கருத்துக்களைக்கூடக் குறள் (கள்ளுண்ணாமை, கொல்லாமை, புலால் மறுத்தல் முதலியன) பதிவுசெய்துள்ளது. சங்க இலக்கியங்கள் சுட்டாத தவ்வை திருக்குறளில்தான் முதன்முதலாக வெளிப்படுகிறார். பல்லவர், பாண்டியர் குடைவரைகளில் (வல்லம், பரங்குன்றம், ஆண்டிச்சிப்பாறை) இடம்பெறும் மிகச் சில இறை வடிவங்களில் ஒன்றாக இவர் உயர்நிலை பெறுவதைக் குறளின் அறிமுகத்துடன் தொடர்புபடுத்திப் பார்க்கமுடியும். இது குறளின் காலத்தை உறுதிப்படுத்தவும் உதவும். குறளில் இடம்பெற்றுள்ள பல சொற்கள் சங்க இலக்கியங்களிலும் காப்பியங்களிலும் பயின்று வந்துள்ளன. தலைமையையும் மூத்தாரையும் குறித்த சங்கச் சொல்லான ‘ஐ’ குறளில் அதே பொருளில் தலைமையைக் குறிக்க ஆளப்பட்டுள்ளது (என் ஐ முன் நில்லன்மின் தெவ்விர் பலர் என் ஐ முன் நின்று கல்நின்றவர்). இக்குறளில் சங்க நடுகல் கோட்பாடும்

இழையோடுவது காண்க.

இளங்கோவடிகளால் யாக்கப்பட்ட சிலப்பதிகாரம் தமிழ் மொழியின் மிகச் சிறந்த இலக்கியங்களுள் ஒன்றாகும். இந்நூலைச் சங்கம் மருவிய காலப் படைப்பாகப் பல தமிழறிஞர்கள் கொள்ள, ஒரு சிலர் இதை 8ஆம் நூற்றாண்டுக் காப்பியமாகக் கொள்கின்றனர். இதன் உள்ளீடு கொண்டு ஆராய்வார்யாரும் இதைப் பொ. கா. 6ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட படைப்பாகக் கொள்ள இயலாது. அப்பரும் சம்பந்தரும் போற்றிக் கொண்டாடும் உமை சிலப்பதிகாரத்தில் மூன்று இடங்களில் மட்டுமே குறிக்கப்படுகிறார். இம்மூன்று இடங்களிலுமே சிவபெருமானின் ஒரு பாதியாக அவ்வம்மை விளங்கும் செய்திதான் கூறப்பட்டுள்ளது. இத்தகவல் உமையை மலைமகளாக அறிமுகப்படுத்தும் முருகாற்றுப்படையிலும் இடம்பெற்றுள்ளது. காரைக்கால் அம்மையால் முதன்முறையாகச் சுட்டப்படும் ‘மத்தளம்’ எனும் தோல்கருவி பொ. கா. 8ஆம் நூற்றாண்டுப் பல்லவர், பாண்டியர் கட்டமைப்புகளில் முழு வீச்சுடன் காணப்படுகிறது. ஆனால், சிலப்பதிகாரம் தலைமைத் தோல்கருவியாக அரங்கேற்றுகாதையில் சங்கப் புகழ்த் தண்ணுமையையே முன்னிருத்துகிறது.

கொற்றவையை மிக எளிய நிலையில் காட்டும் சங்கப் போக்கிலிருந்து முருகாற்றுப்படை, கலித்தொகை, பரிபாடல் வண்ணனைகள் சற்றே மாறுபட்டுக் கூடுதல் செய்திகள் தந்தாலும் கொற்றவைத் தெய்வம் குறித்த மிக விரிவான தகவல்களைச் சிலப்பதிகாரமே கொண்டுள்ளது. இக்கொற்றவை பொ. கா. 7, 8ஆம் நூற்றாண்டுகளில் பல்லவர், பாண்டியர், முத்தரையர் குடைவரைகளில் (வல்லம், சிங்கவரம், மாமல்லபுரம், மலையடிப்பட்டி, திருத்தங்கல், பரங்குன்றம்) சிலம்பின் வண்ணனைகளை ஒட்டியே காட்சிதரத் தொடங்குவது எண்ணத்தக்கது. இவையெல்லாம் நோக்க, சிலப்பதிகாரத்தின் காலத்தைப் பொ. கா. 6ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகக் கொள்வதே பொருந்துவதாகும். கலைசார்ந்தும் வாழ்வியல் போக்குகள் சார்ந்தும் சங்கத்தின் பல சாயல்களைச் சிலப்பதிகாரத்தில் காணமுடிவது இக்கருத்துக்குக் கூடுதல் வலிமை தரும். எனில், தமிழ்மொழியின் மிகச் சிறந்த காப்பியமான சிலப்பதிகாரம் உருவான களமாக இருண்டகாலமே அமைந்தது என்பதும் உணரப்படும்.

சிலப்பதிகாரத்தில் சுட்டப்படும் இசை, ஆடல் செய்திகள் சங்க அமைப்பை ஓரளவிற்குத் தழுவியும் பேரளவிற்கு விலகி யும் நிற்பது சங்கம் மருவிய காலத்தில் இவ்விரு கலைகளும் கண்ட வளர்ச்சியினால்தான். சங்கப் பொதியில் மறைந்து, கோட்டங்களும் கோயில்களும் கருவிகளுக்காகவும் இறைவடிவங்களுக்காகவும் இக்காப்பியத்தில் தோற்றம் தருவது, இக்காலத்தே கட்டமைப்பிலும் கருத்தியலிலும் நிகழ்ந்த மாற்றங்கள் எனக் கொள்ளலாம். பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக் குறிக்கும் கோட்டம் சிலப்பதிகாரக் கோட்டத்துடன் ஒப்புநோக்கத்தக்கது. இக்கல்வெட்டுக் குறிப்பிடும் தேவகுலம் என்ற சொல், பொ. கா. 3ஆம் நூற்றாண்டினதான குணபதேயச் செப்பேட்டில் கண்காட்டி, பொ. கா. 6ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட வல்லம், சிறுவாக்கம் கல்வெட்டுகள்வரை தொடர்ந்துள்ளது. இது கடவுட்குலமாக ஐங்குறுநூற்றிலும் பதிவாகியுள்ளது.

### பெண்ணியம்

கருந்திரைக்குப்பின் ஒடுங்கிய இம்மூன்று நூற்றாண்டுக் காலத்தில்தான் பெண்மையின் எழுச்சியைக் காணமுடிகிறது. கூற்றுகள்

வரையறுக்கப்பட்டவளான சங்கத்தலைவி, அடுத்த நிலையில் தகைசான்ற சொற்காக்க வேண்டியவளாகக் குறள் காட்டும் தலைவியாகிச் சிலப்பதிகாரத்தில் பாண்டியன் அரசவையில் வழக்கு உரைப்பவராக மாற்றம் பெறும் வீறு சமுதாயத்தில் காணப்பட்ட நிலைகளின் பிரதிபலிப்புகளாகவே இருக்கமுடியும்.

வாயிலில் நின்ற கண்ணகியைப் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் வண்ணனை செய்யும் காவலன், அக்காலத்தே பெண் தெய்வ வழிபாட்டுச் சிந்தனைகளில் நிகழ்ந்த மிகப்பெரும் மாற்றத்தை உரிய தொன்மப் பின்னணிகளில் புலப்படுத்தும் பாங்கு, இருண்டகால இறையியல் அறிய உதவும். சிலம்பு அறிமுகப்படுத்தும் காளி, காரைக்கால் அம்மையால் சுட்டப்பட்டு, சம்பந்தர், அப்பரால் கைக்கொள்ளப்பட்டமை, கூடுதல் செய்திகளாக ஆடல் தலைமை சிவபெருமானை அடைந்தது பற்றியும் நாட்டியசாத்திரத்தின் அறிமுகம் தமிழகக் கலைவடிவங்களில் புதுமைகளை இணைத்தமை பற்றியும் தெரிவித்தல் அறிக. சிலப்பதிகாரம் குறிப்பிடும் எழுவர்அன்னையர் பொ. கா. 7, 8ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய குடைவரைகளிலும் கற்றளிகளிலும் சிற்பவடிவங்களாகப் பொளியப்பட்டுள்ளமை (குன்னத்தூர், பரங்குன்றம், கோளக்குடி, மலையடிப்பட்டி, காஞ்சிபுரம்) காப்பியப் பதிவுக்குக் கிடைத்த கண்ணெதிர்ச் சான்றுகளாகும்.

இதுகாறும் பார்த்த அனைத்துச் சான்றுகளும் விரிவான அளவில், சார்பற்ற நோக்கில் ஆராயப்பட்டால், இருண்ட காலமாக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் பொ. கா. 250–550க்கு இடைப்பட்ட காலத்தின் வரலாற்றைப் பெருமளவிற்கு மீட்டுருவாக்கம் செய்ய முடியும். அகழாய்வுகளில் கிடைத்திருக்கும் இக்காலகட்டக் கலத்துண்டுகள் பற்றிய பரவலான ஒருங்கிணைந்த அறிவியல் அடிப்படையிலான ஆய்வுகள் களப்பிரர் கால வரலாற்றுக்குக் கூடுதல் பக்கங்களைத் தரமுடியும்.

இக்கட்டுரையில் முன்னிருத்தப்பட்டிருக்கும் சான்றுகள் முதற்பார்வையிலேயே, இக்காலத்தே தமிழ்நாடு முழுவதும் களப்பிரர் ஆட்சியில் தொடர்ந்து இருக்கவில்லை என்ற உண்மையையும் சோழர்களும் பல்லவர்களும் முத்தரையர், வேளிர், பாணர், கொங்கர் முதலிய பல்வேறு சிற்றரசர்களும் சங்கம் மருவிய கால ஆட்சியாளர்களாக இங்கு நீடித்திருந்தனர் என்ற உறுதிப்பாட்டையும் புலப்படுத்துவதுடன், மதுரையை ஆண்ட களப்பிரர்கள் சமண சமயத்தவர் புகாரை ஆண்ட களப்பிரர்கள் புத்தசமயத்தினர் எனும் முந்து கூற்றுகளின் உண்மைத்தன்மையையும் கேள்விக்குரியதாக்குகின்றன.

களப்பிரர்கள் எச்சமயத்தவர்களாக இருந்தபோதும், தாம் ஆண்டபகுதிகளில் விளங்கிய மொழி, சமயம், பண்பாடு, சமூக மரபுகள், வாணிகம் என எது சார்ந்தும் இடையூறு விளைவிக்கவில்லை என்பதும் தமிழ்நாட்டின் கலை, பண்பாடு, வாணிகம், மொழி ஆகியவை அவர்தம் ஆட்சிக்காலத்தே தொடர்ந்து வளர்ச்சிப்பாதையில் முன்னேறிச் செழித்தன என்பதும் இக்கால எல்லை சார்ந்து கிடைத்திருக்கும் அனைத்துச் சான்றுகள் வழிப் பெறப்படும் வரலாற்று உண்மைகளாகும். அவற்றின் அடிப்படையில், இனியேனும் சங்கம் மருவிய காலத்தை இருண்டகாலம் என்று அழைக்காமல், அதற்குக் கூடுதல் ஒளிசேர்க்கும் பணியில் ஆய்வாளர்கள் கையிணைக்கலாம்.

(நிறைவு)

# கந்தர் அநுபூதி

ஓர் ஆனந்த அனுபவம்

# அருணகிரிநாதர் அருளிய அலங்காரமும் அந்தாதியும்






**டாக்டர். வ.ஜெயபாலன்**

ஈப்போ, மலேசியா

முருகன் அலங்காரப் பிரியன். பேரருள் காட்டி தன்னை ஆட்கொண்ட பெருமானுக்கு, என்றென்றும் நிலைத்திருக்கும் அலங்காரம் செய்ய வேண்டுமென்று அருணகிரிநாதருக்கு அளவில்லா ஆசை.

அழகு தெய்வம் முருகனுக்கு, மலரால் அலங்காரம் செய்தால் மலர் வாடிவிடும். சந்தனம் ஜவ்வாது அலங்காரமோ, சிறிது நேரத்தில் மணம் குறைந்துவிடும். வைரம், பொன்மணிகளால் செய்யும் அலங்காரமும், என்றென்றும் நீடித்து இருக்காது. கொடியவர்கள் கொள்ளை கொண்டு போகலாம், அப்படியென்றால்,



முருகனுக்கு செய்யும் அலங்காரம் நிலையாக இருப்பதற்குத் தமிழைத் தேர்ந்தெடுத்தாராம் அருணகிரிநாதர்.

அதுதான் பைந்தமிழும் பக்தியும் கலந்த “ கந்தரலங்காரம்” என்ற தெய்வீகச் சொல்லலங்காரம்.

அருணகிரிநாதருக்கு முன்பு வரை, இலக்கண நூல்களுக்கே அலங்காரம் என்ற பெயர் தமிழ் வழக்கில் இருந்து வந்துள்ளது. தண்டியலங்காரம், மாறனலங்காரம் போன்றவை செய்யுள்களை அழகுபடுத்தும் இலக்கண நூல்கள், இந்த வழக்கத்திலிருந்து மாறுபட்டு. பக்தி இலக்கியத்தில் அலங்காரமெனும் சிற்றிலக்கிய வகையில் முதல் நூலாக “கந்தரலங்காரம்“ திகழ்கின்றது.

காப்புச் செய்யுளுடன் 101 பாடல்கள், பிற்சேர்க்கையாக மேலும் 7 பாடல்கள். ஆக 108 பாடல்கள், கட்டளைக் கலித்துறை எனும் பாவமைப்பில் முருகப்பெருமானின் சிறப்பினை அடி முதல் முடி வரை அழகுறக் கூறுகின்றது.

முருகன் அணியும் கடம்ப மாலையும், வேலும், மயிலும், சேவற்கொடியும் இறைவனின் திருசின்னங்களாகப் பெருமைப்படுத்தப்படுகின்றன.

கந்தரலங்காரத்தில் வரும் பாடல்கள் மாம்பழம் போன்றவை. தமிழறிவு எனும் கத்தியை கொண்டு வெட்டினால், கற்கண்டாய் இனிகக்கூடிய கந்தன் கவிதையை எளிதாகச் சுவைக்கலாம்.

“சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல் வேந்தனைச் செந்தமிழ் நூல்வி ரித்தோனை விளங்கு வள்ளி

காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச் சார்ந்துனைப் போதும் மறவாதவர்க் கொரு தாழ்வில்லையே’’

என்ற கந்தரலங்காரப் பாடலைச் சொல்லும் பொழுது அதற்குத் தனியாக விளக்கவுரை தேவையில்லை. ஆனால், அருணகிரிநாதர் வில்லிபுத்தூராரின் செருக்கை அறுக்க எழுதிய “கந்தரந்தாதி” அப்படியில்லை. ஆழ்ந்த இலக்கண அறிவு இருந்தால் மட்டுமே, இதன் அரிய பொருளை, முயன்று பிளந்த பலாக்கனியின் சுளையைச் சுவைப்பதுப்போல் பகுத்துணர முடியும்.

அந்தாதித் தொடையில், கட்டளைக் கலித்துறை எனும் யாப்பில் அமைந்த நூறு பாடல்களும் இரும்புக் கடலையை மெல்வது போலக் கடினமான சொற்பொருள் அமைய இயற்றப்பட்டுள்ளது. இதனால்தான், ‘’கந்தரந்தாதியைப் பாராதே கழுக்குன்றத்து மாலையை நினையாதே” என்று சான்றோரிடையே ஒரு வார்த்தை உண்டு. திருவுலா வந்த திருக்கழுக்குன்ற நாதரின் கழுத்திலிருந்து மாலையைத் தனக்கு மணமாலையாக அடைய விரும்பினாள் பெண்ணொருத்தி. அப்பெண்ணுக்கு அம்மாலை எட்டாக் கனியாக இருந்த அரும்பாட்டை உணர்த்துவதற்கு கந்தரந்தாதியின் சொற்பொருள் விளங்கா நிலையை உவமையாகச் சொல்வதாக இச்சொற்றொடர் அமைந்துள்ளது.



அருணகிரிநாரின் புலமையை சோதிப்பதற்காக ஏற்பட்ட வாதத்தில் தோன்றியதால், அந்தாதிப் பாடல்களின் பொருளை அறிவதற்கு தனிப்புலமை வேண்டும். இந்நூலின் நூறு பாடல்களுமே வல்லின உயிர்மெய் எழுத்துக்களான சி.சீ.சே.தி,தீ, தெ.தே என்ற எழுத்துக்களில் தொடங்கும் பாடல்களாகவே உள்ளன.

ஒவ்வொரு பாடல்களின் நான்கு அடிகளிலும் கூறப்படும் ஒரே சொல்லுக்கு பற்பல பொருள் உணர்த்துமாறு அமைந்ததும் இதன் தனிச்சிறப்பாகும். வாதத்தால் வந்த நூலென்றாலும் பல தனிச் சிறப்புக்களைக் கொண்டுள்ள கந்தரந்தாதி தெய்வத்தமிழுக்கு கிடைத்த நல்முத்து.

## எட்டாம் திருமுறை

சைவத்திருமுறைகள் பன்னிரண்டாகத் தொகுக்கப்பட்டது போல, “முருகவேள் பன்னிரு திருமுறைகள்“ என முருகனது பாடல்கள் பின்னாளில் தொகுக்கப்பட்டன. முதல் ஏழு திருமுறைகள் திருப்புகழ்கள் .

சிவனுக்கு எட்டாந் திருமுறையாக திருவாசகம், திருக்கோவையார்போல முருகனுக்குக் கந்தரலங்காரமும், கந்தரந்தாதியும் எட்டாந் திருமுறையாக அமைந்துள்ளது.

ஒன்பதாம் திருமுறையாக இசைப்பாடலாம் திருவகுப்பு அமைந்துள்ளது. பத்தாந் திருமுறையான திருமந்திரத்திற்கு நிகராக கந்தரனுபூதி மந்திர நூலாகத் திகழ்கின்றது. பதினோராந் திருமுறையாக நக்கீரர், பரிபாடல் ஆசிரியர்கள், கல்லாடர் போன்ற பழவடியார்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பன்னிரண்டாந் திருமுறையாக முருகனின் தொண்டர்கள் புராணமான தேனூர் வரகவி வே.செ. சொக்கலிங்கம் பிள்ளை இயற்றிய சேய்த்தொண்டர்புராணம்“ (1951) இடம் பெற்றுள்ளது.

முருகப் பெருமான் பன்னிரன்டு திருக்கரங்களால் அருள்பாலிப்பது போன்று, முருகவேள் பன்னிரு திருமுறைகளும், முருகனின் அருளை அருந்தமிழால் அடியார்களுக்கு அள்ளித் தருகின்றது.

‘திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்” என்று திருவாசகத்தின் சிறப்பைக் கூறுவார்கள். அதைப்போல, கந்தரலங்காரமும் படிப்பவர் மனத்தை உருக்கக்கூடியது. அவர்தம் மனோபலத்தை பெருக்கக்கூடியது. அதனால்தான் இதன் நிறைவுப்பாடலில் நூற்பயனாகக் குறிப்பிடும்பொழுது *சலங்காணும் வேந்தர் தமக்கஞ் சார், யமன் சண்டைக் கஞ்சார்” என்று கந்தரலங்காரத்தில் ஒரு கவியையாவது கற்றுணர்ந்தவர்கள் கூட எதைக் குறித்தும், யாரைக் குறித்தும் அஞ்சமாட்டார்கள். அவர்களுக்கு முக்திபேறு சித்திக்கும் என்பதாக அருணை மாமுனிவர் கூறுவார்.

அதே எட்டாம் திருமுறையில் மற்றொரு நூலான திருக்கோவையார் சிவபெருமானுக்குரிய சிறந்த அகப்பொருள் நூலாக போற்றப்படுவது போல முருகப்பெருமானுக்குரிய அகப்பொருள்

நூலாக கந்தர் அந்தாதியும் திகழ்கின்றது.

## நூற் சிறப்புக்கள்

### கந்தனை முன்னிறுத்திய சமய நல்லிணக்கம்

அருணகிரிநாதர் அவதரித்த காலம் 15ஆம் நூற்றாண்டு. இது சைவ வைணவ சமயப் பூசல் மிகுதியாக இருந்த காலக்கட்டம். போதாதற்கு தமிழ் நாட்டில் அச்சமயத்தில் தோன்றிய பௌத்தம், சமணம் மற்றும் இஸ்லாமிய சமயத்தினரின் தாக்கங்கள். சிறுதெய்வ வழிபாடு பற்றிய மிகுதியான சிந்தனைகள் இவையெல்லாம் மக்களிடையே ஒரு குழப்பமான நிலையை ஏற்படுத்தின. அந்தக் குழப்பத்தைக் களைந்து, இந்து சமயத்தின் முக்கிய கூறுகளான கணாபத்யம் சாக்தம் கௌமாரம் சைவம் வைணவம் சௌராஷ்டிரம் என்ற ஆறு சமயங்களிடையேயும் ஒரு நல்லிணக்கத்தை ஏற்ப்படுத்த விரும்பினார் அருணகிரிநாதர்.

ஒரு குழந்தையின் வரவால் பிளவு பட்டிருக்கும் குடும்பங்கள் ஒன்றுபடும் என்பது உலக நியதி. சைவம் பெரிதா? வைணவம் பெரிதா? சாக்தம் பெரிதா? என்று பிரிவினைச் சண்டையில் தத்தளித்துக் கொண்டிருந்த சனாதன தர்மத்தை ஒற்றுமைப்படுத்த, முருகன் எனும் குழந்தையைச் சீராட்டி, அந்தக் குழந்தையின் மூலமாக எல்லாத் தெய்வங்களையும் தாய், தந்தை, அண்ணன், மாமன், மாமி என்று உறவு பாராட்டி, அதே வேளையில் முருக பக்தியை மையப்படுத்தி, சமய உலகின் எல்லைகளை விரிவுப்படுத்துகிறார் அருணகிரிநாதர். ஆறு சமய நல்லிணக்கத்தையும், புரிந்துணர்வையும் ஏற்ப்படுத்துகிறார்.

“கந்தன்” என்ற சொல்லுக்கு ஒன்றுப்பட்டவன் என்ற பொருளுண்டு. சேயவன் வடிவமாறும் திரட்டி நீ ஒன்றாய்ச்



செய்தாய் ஆயதனாலே கந்தன் ஆமெனும் நாமம் பெற்றான் என்பார் கச்சியப்ப சிவாச்சாரியார். ஆறாகப் பிறந்து, தாய் சிவகாமி அள்ளி அணைக்க ஒன்றாக இணைந்தவன் மட்டுமல்ல கந்தப்பெருமான், பல்வேறு கூறுகளாக பிரிந்து கிடந்த அன்றைய சனாதன தர்மத்தை, ஒன்றாகப் பிணைப்பதற்காக காரணமானவனும் நம்முடைய சொந்தக்கடவுளாகிய கந்தக்கடவுளே!

கந்தனின் பெருமைகளைச் சொல்லும்பொழுது திருப்புகழைப்போல், கந்தரலங்காரத்திலும், கந்தரந்தாதியிலும் பல இடங்களில் இராமாயணச் சம்பவங்களையும், கிருஷ்ணாவதார லீலைகளையும் குறிப்பிட்டு அதற்கு நாயகமாகிய ராமனின் மருமகனே என்று சொல்லி வைணவத்திற்கும், சைவத்திற்கும் உறவுப் பாலம் அமைக்கிறார் நம்முடைய அருணகிரிநாதர்.

இலங்கைக்குச் செல்ல, கடலருகிற் சென்று வழிகாட்டு என்று கூற, கடல் வழி காட்ட மறுக்க, அந்தக் கடல் நீரும் வற்றும்படி வெற்றியைத் தரும் கோதண்டம் என்ற வில்லை வளைத்தவரான இராமனின் மருமகனே என்ற இராமாயணச் செய்தியைச் சொல்லும் 54ஆவது பாடலை இங்கே குறிப்பிட்டுச் சொல்லலாம்.

................................யிலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டு என்று போய்க் கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே

(பாடல் 54 )

மேலும் 15ஆவது பாடலில் திருமாலின் வாமன அவதாரச் சிறப்பு, 50ஆவது பாடலில் காளிங்கன் என்ற பாம்பின் மீது கண்ணன் நர்த்தனமாடிய செய்தி என்று கந்தரலங்காரத்தில் திருமால் அவதாரப் பெருமைகளையும் அடுக்கிக் கொண்டே போகலாம்.

அதைப்போலவே, கந்தரந்தாதியிலும் மகாபாரத யுத்தத்தில் துரியோதனாதிகள் நூறு பேரையும் அழித்து, பஞ்ச பாண்டவர்களை காத்து, அவர்கள் ராஜ்ஜியத்தை ஆளும்படி செய்தவன் கிருஷ்ணன் என்று பொருள்படும் 22ஆவது பாடலும், வாலி வதம் பற்றிக் கூறும் 47ஆவது பாடலும் வைணவர்களின் பக்தியையும், இறை நம்பிக்கையையும் மதித்துப் போற்றிய அருணகிரிநாதரின் எழுத்துக்குச் சில சான்றுகள்.

## முருகனே முழுமுதற் கடவுள் குகபரத்துவம்

பல தெய்வங்களை முருகனோடு பிணைத்துப் பாடினாலும், முருகனே முழு முதற் கடவுள் என்று பக்தி நெறியிலும் கற்பு நெறி மாறாமல் வாழ்ந்தவர் அருணகிரிநாதர், ஏக தெய்வ வழிபாட்டுக்கு இவரே ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

“வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் விழ்ந்திறைஞ்சி
மாலே கொள்இங்ஙன் காண்பதல் லால்மன வாக்குச் செய
லாலே அடைதற் கரிதாய் அருவுரு ஆகி ஒன்று
போலேஇருக்கும் பொருளைஎவ் வாறு புகல்வதுவே
(பாடல் 28)

மனம், வாக்கு, காயம் எனும் திரிகரணங்களாலேயும் அடைவதற்கு அரிதாய் அருவுருமாகி நிற்கும் பரம்பொருளை அடையும் வழியை எவ்வாறு சொல்லுவது? வேல் விளங்கும் திருக்கரத்தையுடைய வேலவனின் சிவந்த திருவடிகளில் விழுந்து தொழுது அவன்மேல் பக்தி கொண்டால், பரம் பொருளை தரிசிக்கலாம் என்பது இப்பாடலின் பொருள். இறைவனின் திருவடிப்பேறை இதை விட எளிதாகக் கூறுவது கடினம்.

பொதுவாகவே கந்தரலங்காரம் முழுவதுமே அருணகிரிநாதர் பரம்பொருளான முருகனின் அருள் பெறுவதற்கு முன்பும், அருள்பெற்ற பின்பும் அவ்வப்பொழுது பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பு.

முருகனின் திருவடியே சரணமென்று சதா சர்வ காலமும் முழுமுதற் பொருளாய் அவனைத் தியானித்த அருணகிரிநாதருக்கு, எந்த நேரத்திலும், எந்த இடத்திலும் வந்து இறைவன் அருள் பாலித்ததை அவர் அனுபவித்து எழுதுகிறார்.

செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிறைத்தநந் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியும் செங் கோடைக் குமரன்என
எங்கே நினைப்பினும் அங்கேஎன் முன்வந் தெதிர்நிற்பனே!
(பாடல் 103)

அதுவும் முருகன் தனியாக வருவதில்லையாம். முழுமுதற் பொருளாய் தன்னைச் சரணடைந்த அடியவர்க்கு அருள்புரிய, தன் சக்தியாம் அழகுக் குறத்தி வள்ளி நாச்சியாருடன் வருவாராம். விரைவாக வரவேண்டுமென்று மயில் மீது வருவாராம்.

நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலும்
கோலக்குறத்தியுடன் வருவான்.......... "
(பாடல் 26)

சிவனின் அம்சமாகிய முருகனே மும்மூர்த்திகளுக்குப் முதல்வன் என்ற குகபரத்துவத்தை கந்தரந்தாதியிலும் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழில் மகாபாரதம் எழுதிய வில்லிபுத்தூரார் பொருள் தெரியாமல் திகைத்த கந்தரந்தாதியின் 54ஆவது பாடல். அவர் அகந்தையை அடக்கிய பாடல், "தித், தத்தத், தித்த, திதி...." என்று துவங்கும் தகர வர்க்கப் பாடல். இப்பாடலில், "திதத்தத் தத்தத்" என்று தாளத்துடன் நடனமிடும் ருத்திரனும், பிரம்மாவும், பாற்கடலில் ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும் வணங்குதற்குரிய முதல்வனே! என்று மும்மூர்த்திகளும் வணங்கும்



பரம்பொருளாக முருகனைப் போற்றுகிறார்.

கந்தரலங்காரத்திலும், முருகா எனும் நாமங்கள்......" (பாடல் 70) என்று முருக நாமத்தை பன்மையாகக் குறிப்பிடுவதன் மூலம் அதில் மறைந்திருக்கும் முமுகுந்தன், ருருத்திரன், காகாமன்" என்ற மும்மூர்த்திகளின் நாமங்களையும் மறைபொருளாகக் குறிப்பிட்டு முருகனையே முழுமுதற் கடவுளாக வணங்குகிறார்.

## இறையுணர்வுடன் கூடிய தமிழுணர்வு

அருணகிரிநாதர் வாழ்ந்த 15ஆம் நூற்றாண்டில் சமஸ்கிருதச் சொற்களை கலந்து எழுதுவது அக்காலத்துக்கு இயல்பான ஒன்றாக இருந்தாலும், அவர் தமிழுக்கே முதன்மை தந்தார். அவர் இறையுணர்வோடு எழுதிய பாடல்களிளெல்லாம் தன்னுடைய தமிழுணர்வைக் காட்டத் தவறவில்லை.

முருகன் தமிழை விரும்புகின்றவன், அவன் “தண்டமிழில் மிகுநேய முருகேசன்”, “முத்தமிழ் வித்வ வினோதன்” அது மட்டுமா, ஓம் எனும் பிரணவ மந்திரத்திற்கு சிவபெருமான் பொருள் கேட்க, அதற்கு முருகப் பெருமான் தமிழிழ்தான் பொருள் சொன்னார். அன்றைக்கே கந்தலோகத்தில் சிவனாகிய தந்தையும் முருகனாகிய மகனும் பேசிக்கொண்டது தமிழில்தான் என்ற செய்தியை முதன்முதலில் உலகுக்கு உரக்கச் சொன்னவர் அருணகிரிநாதர்.

மதித்துத் திண்புரச் சிரித்துக் கொன்றிடும்
மறத்தந் தந்தை மன்றிலாடி
மழுமை கொண்ட சங்கரருக்குச் சென்று
வண்டமிழ்ச்சொற் சந்த மொன்றருள்வோனே”

என்பது திருச்செந்தூர்த் திருப்புகழ். கந்தரலங்காரத்தில் தமிழ் மொழிக்குக் காவலன் “செந்தமிழ் நூல்விரித்தோனாகிய கந்தவேளே (பாடல் 72) என்கிறார் “ மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள்” (கந்தரலங்காரம் பாடல் 70) இதையெல்லாம் விட ஒரு படி மேலே சென்று, முருகன் தமிழின் மீது தீராத காதல் கொண்டவன். அவனைத் திட்டுபவர்கள் கூட தமிழில் திட்டினால், திட்டும் மொழி தமிழென்பதால், அவர்களையும் வாழவைப்பான் எனும் பொருள்பட,

மொய்தாரணிகுழல் வள்ளியை வேட்டவன்
முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான்”

(பாடல் 22)

என்று வையாபுரிப் பெருமானைத் தமிழின் நேசக்காரப் பெருமானாய் போற்றித் துதிக்கின்றார். அருணகிரிநாதரின் தமிழுணர்வுக்கு மேலும் கட்டியம் கூறும் கந்தரந்தாதியில் வரும், சிகைத் தோகை மாமயில் வீரா ” என்று தொடங்கும் 51 ஆவது பாடல் குறிப்பிடத்தக்கது.

ஐராவதம் வளர்த்த தெய்வயானை தரும் இன்பத்தைவிட நக்கீரர் சொல்லிய திருமுருகாற்றுப்படைத் தமிழ் உனக்குத் தித்தித்ததன்றோ என்று பொருள்படும் இப்பாடல் வரிகள், மங்கையொருத்தி தரும் சுகமும் எங்கள் மாத்தமிழுக்கு ஈடில்லை” என்ற பாவேந்தர் பாரதிதாசனின் கவிதை வரிகளிலிலும் எதிரொலிக்கின்றது.

## வாழ்வியல் நெறிகள்

இறைவனின் அருளை அடைவதற்கு முன்பு மனிதன் மனிதனாக இருக்கப் பழக வேண்டும். மனிதநேயம், அதனால் வரும் கொடையுள்ளம், சினம் அடக்கும் தன்மை, நிலையாமை உணர்தல் போன்ற வாழ்வியல் நெறிகளை உணராதவன், எக்காலத்திலும் இறைத்தன்மை எனும் உயர்ந்த நிலையை நிச்சயமாக அடைய முடியாது. இந்த வாழ்வியல் நெறிகளை அறிவுறுத்துவது முருகவேளின் எட்டாந் திருமுறையாகிய கந்தரலங்காரமும், கந்தரந்தாதியும். அவை தோத்திரப் பாடல்கள் மட்டுமன்று, வாழ்க்கைக்கு வழிகாட்டும் சாத்திரப் பாடல்கள்.

வாழ்க்கையில் நான்கு நெறிகளை கடைப்பிடித்தால் வேலவனின் அருள் தானாகவே அடியவரை வந்தடையுமாம். அது என்ன நான்கு நெறிகள்? கந்தரலங்காரம் 16வது பாடலைப் படியுங்கள். அவர் கூறும் நான்கு நெறிகள் தெரியும்.

1. தடுங்கோள் மனத்தை – உள்ளத்தை உணர்வுவழிப் போகவிடாமல் தடுத்திடுங்கள்.

2. விடுங்கோள் வெகுளியை – கோபத்தை விடுங்கள்.

3. தானமென்றும் இடுங்கோள் – தானம் செய்யுங்கள்.

4. இருந்தபடி இருங்கோள் – உண்மை நிலை மாறாமல் அதில் நிலையாக இருங்கள்.

இன்றைய மனிதர்கள் மன அமைதியைத் தேடி நாளும் பொழுதும் அலைகின்றார்கள். உண்மையான செல்வம் எது? கோடி கோடியாய்ப் பணம் இருந்தாலும், குமரன் காலடியில் கிடைக்கும் ஆனந்தத்தை வாங்க முடியாது." சுழித்துக் கொண்டு ஓடும் ஆற்றினது வெள்ளம் போன்றது செல்வம் என்று உலகியல் செல்வத்தின் நிலை யில்லாத் தன்மையையே அருணகிரிநாதர் "சுழித்தோடும் ஆற்றின் பெருக்கானது செல்வம்" (கந்தரலங்காரம் 36வது பாடல்) என்கிறார். அப்படியென்றால், உண்மையான செல்வம் எது? என்று கேள்வி வரும். முருகப் பெருமானின் மெய்யடியார்கள் நட்புதான் உண்மையான செல்வம் என்று கந்தரலங்காரம் 49ஆம் பாடலில் மிகவும் அழுத்தமாகச் சொல்கிறார்.

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதிஅன்றி வேறில்லை...."
(கந்தரலங்காரம்49)

மகத்தான மனிதநேயம் கந்தரலங்காரத்தில் சிறப்பிக்கப்படுகிறது. மக்களுக்குச் செய்யும் தொண்டு, மகேசனுக்குச் செய்யும் தொண்டு, பசித்தவர்களுக்கு உதவாதவர்கள் முருகனுக்குத் தொண்டு செய்யாதவர்கள், ஏனென்றால் நம்முடைய உடம்பு நிலை யில்லாதது. நீர்க்குமிழி போன்றது. நாம் சம்பாதித்த செல்வமும் நீடித்திருக்காது. இருக்கும்பொழுதே இல்லாதவர்களுக்கு உதவ வேண்டும். இதைத்தான் பின்வரும் 66ஆவது கந்தரலங்காரப் பாடல் உணர்த்துக்கிறது.

நீர்க்குமிழிக்குநிகரெண்பர் யாக்கை நில்லாது செல்வம்
பார்க்கும் இடத்து அந்தமீன் போலும் என்பர் பசித்து வந்தே
ஏற்கும் அவர்க்கு இட என்னின் எங்கேனும் எழுந்திருப்பார்
வேற்குமரற்கு அன்பில்லாதவர் ஞானம் மிகவும் நன்றே

ஏழைகளுக்குக் கொடுத்து வாழ வேண்டும். ஈயார் தேட்டை தீயார் கொள்வர் என்ற இதே மனித நேயக் கருத்தை கந்தரலங்காரம் 53ஆவது பாடலிலும் முன் வைக்கிறார்.

"வேடிச்சி கொங்கை விரும்பும் குமரனை மெய்யன்பினால்
பாடிக்கசிந்து உள்ளபோதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப்புதைத்துத் திருட்டில் கொடுத்துத் திகைத்து இளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணாக மாய்ப்பவரே"

இப்பாடல் வரும் அருணை முனிவர் திருவாக்கு இன்றைய வாழ்க்கைச் சூழலுக்கும் பொருந்தும். மேற்சொன்ன கருத்துக்கள் அனைத்தும் கந்தரந்தாதியிலும் (குறிப்பாக பாடல்கள் 66 மற்றும் 84) வலியுறுத்துகிறார்.

முடைநாற்றம் வீசும் மூட நம்பிக்கைகளுக்கு முற்றுப் புள்ளி வைக்கிறது கந்தரலங்காரம். இறைவன் மீது முழு நம்பிக்கை வைத்தால், நாளும் கோளும் ஒன்றும் செய்யாது. பரிகாரங்கள் தேவையில்லை. அவ்வளவு ஏன், பிரமன் எழுதிய தலையெழுத்தைக் கூடி முருகனின் சேவடி அழித்துவிடும் என்பது கந்தரலங்காரத்தில் அருணகிரிநாதர் மூலமாக அந்த ஆறுமுகப் பெருமானே தன் அடியவர்க்கு உணர்த்துகிறார்.

நாளென் செய்யும்? வினைதான் என் செய்யும்?
எனை நாடி வந்த கோள் என் செய்யும்?
கொடுங் கூற்று என் செய்யும்?
குமரேசர் இரு தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும் தோளும்
கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே
(பாடல் 38)

## மரணபயம் போக்கும் மாமருந்து

முருகப் பெருமானை வணங்கும் அடியவர்க்கு மரணத்தைப் பற்றிய பயம் இருக்காது. ஏனென்றால் எருமையில் ஆடி அசைந்து அந்த எமன் வருவதற்கு முன்பே, மயில் மீதில் முருகன் கருணையின் வடிவாய் மனோ வேகத்தில் வருவான். அதனால், மரணம் என்பது பெரிய விஷயமல்ல. “மரணப்ரமாதம் எமக்கில்லை” என்பது அருணகிரியார் வாக்கு (கந்தரலங்காரம் 21). “நாமார்க்கும் குடியல்லோம், நமனையஞ்சோம்“ என்ற அப்பர் பெருமானின் கூற்று இங்கே ஒப்பு நோக்கத்தக்கது.

## நிறைவுரை

முருகவேள் எட்டாந் திருமுறையாகிய கந்தரலங்காரமும், கந்தரந்தாதியும் நம்முடைய பக்தி இலக்கியத்திற்கு அருணகிரிநாதர் அளித்த பெரும் சொத்து. ஆறுமுகச் சிவனின் பரத்துவ நிலையுடன், அறுசமய நல்லிணக்கத்தையும் முன்வைத்தவை இந்த அழகு தமிழ்ப் பாடல்கள். அந்தாதி இல்லா இறைவனுக்கு அந்தாதி பாடிய அருணகிரி, அழகன் முருகனுக்கு சொல்லலங்காரத்தால் மேலும் அழகு செய்தார். காலத்தால் அழியாத அந்தாதியும், அலங்காரமும் முருகனடியார்கள் அனைவரும் அறிந்துகொள்ள வேண்டிய நூற்கள். இதை சாதாரண மக்களும் அறியுமாறு எளிமைப் படுத்தி, அதில் இசைச்சேர்ந்து அவர்களுக்கு ஆற்றுப் படுத்த வேண்டியது தமிழறிஞர்களின் கடமை. இதுவே நற்றமிழ் முனிவர் அருணகிரி நாதருக்கு நாம் செய்யும் கைம்மாறும்மாகும்

ஆறிரு தடந்தோள் வாழ்க!
அறுமுகம் வாழ்க !
ஞானகுரு அருணகிரிநாதர் வாழ்க!

## துணை நூற்கள்

1. தமிழ் மரபும் முருக வழிப்பாட்டு நெறியும்

(ஆய்வுத் தொகுதி இரண்டு )

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி முதற் பதிப்பு ஏப்ரல் 2005

2. ஞான பரம்பரை ( தொகுதி நான்கு)

அருட்செல்வர் டாக்டர் ந.மகாலிங்கம்

3. திருப்புகழ் பாராயண தவநெறித் திருமுறை (ஆறாம் பதிப்பு)

ஸ்ரீ வள்ளிமலை சுவாமி சச்சிதானந்தா திருப்புகழ் சபை

4. கந்தரலங்காரம் மூலமும் உரையும் (ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்)

உரையாசிரியர்: கவிஞர் பத்மதேவன்

5. அருணகிரிநாதர் வேல் கார்த்திகேயன் (முதல் பதிப்பு 2010)

சாகித்திய அகாதமி, புதுடில்லி.

திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 10

## பழனியப்ப ஐயா அவர்களின்

# பொன்மாரியந்தாதி

## - நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

கோவிலூர் மடாலயத்தின் சீடர் பரம்பரையில் இன்றும் நம்மோடு தன் பாடல்களின் மூலம் வாழ்ந்து கொண்டிருப்பவர் பழனியப்பையா அவர்கள். அவர்களது பாடற் தொகுப்பில் அடுத்து வருவது பொன்மாரியந்தாதி.

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று அந்தாதி. அந்தாதி என்பது அந்தம் ஆதி ஆகிய இரு சொற்களால் ஆன வடமொழித் தொடராகும். இத்தொடரில் உள்ள அந்தம் என்பது முடிவு எனப் பொருள்படும். ஆதி என்பது முதல் எனப் பொருள்படும். ஒரு பாடலின் முடிவுச் சொல்லோ முடிவு எழுத்தோ அடுத்த பாடலின் முதற் சொல்லாக முதல் எழுத்தாக அமையப் பாடப்படுவதால் இவ்வகை இலக்கியம் அந்தாதி என அழைக்கப்படுகிறது.

அந்தாதி, ஒலியந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி, நூற்றந்தாதி, கலியந்தாதி என வகைப்படுத்தப்படுகிறது. பழனியப்பையா எழுதிய பொன்மாரி அந்தாதி நூற்றந்தாதி வகையைச் சார்ந்தது. நூறு வெண்பாக்களால் பாடப்பட்டது.

காப்புச் செய்யுள் ஒன்று, அவையடக்கச் செய்யுள் ஒன்று, அந்தாதி வெண்பாக்கள் நூறு சேர்த்து மொத்தம் 102 பாடல்களைக் கொண்டுள்ளது.

### காப்பு

இவ்வந்தாதியின் காப்புப் பாடல், விநாயகர் காப்பாக அமைந்துள்ளது. அப்பாடல்,

"சீராரும் பொன்மாரிச் செல்வச் சிவனார்க்குப்
பேராரும் அந்தாதி பேசவே – ஏராரும்
வேலவற்கு முன்பிறந்த வேழமுகத்து எம்பெருமான்
காவிணைப்பூந் தாமரையே காப்பு"

பொன்மாரிச் செல்வனான சிவபெருமான் மீது நான் அந்தாதி பாடப்போகிறேன். ஆகவே, வேலனான முருகப் பெருமானுக்கும் முன் பிறந்தவனே, யானை முகம் கொண்ட விநாயகப் பெருமானே! உன்னுடைய குளிர்ந்த இரு தாள்களுமே எனக்குக் காப்பு" என்கிறார்.

அந்தாதியின் ஒவ்வொரு வெண்பாவிலும் "பொன்மாரி" என்னும் சொல் தவறாமல் வருமாறு பாடியுள்ளார் பழனியப்பையா.

பொன் மாரி என்றால், தங்க மழை. தங்க மழை பெய்யுமா? நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு உள்ளதே? என எண்ணத் தோன்றும். ஆனால், பொன் மாரி பெய்ததாக இலக்கியங்கள் சுட்டுகின்றன.

ஒரு செவி வழிச் செய்தி, ஒரு காலத்தில் ஒரு ஏழைப் பெண்ணின் வீட்டு வாயிலில், வயதான துறவி ஒருவர் பிச்சை கேட்கிறார். பிச்சை யிடுவதற்கு அந்தப் பெண்ணின் வீட்டில் உணவுப் பொருள் ஏதும் இல்லை. மனம் வருந்தி கண்ணீர் விடுகிறாள். ஆயினும் வந்தவருக்கு இல்லை எனக் கூறக் கூடாது எனக் கருதி, வீட்டு மாடத்தில் இருந்த ஒரே ஒரு நெல்லிக்கனியைக் கொண்டு வந்து கொடுக்கிறாள். ஏழ்மையிலும் பிறருக்குக் கொடுக்கும் அவளது உன்னத மனத்தைக் கண்ட அத்துறவி கனகதாரா ஸ்தோத்திரம் சொல்கிறார். அங்கு பொன் மழை பெய்கிறது. அவள் மட்டுமல்லாது அவ்வூரே செல்வச் செழிப்பைப் பெறுகிறது என்று அக்கதை செல்கிறது. வயதான துறவியாக வந்தவர் ஆதிசங்கரர்.

மற்றொன்று, கொங்கு மண்டல சதகத்தில் கார்மேகக் கவிஞரால் பொன்மாரி பொழிந்த செய்தி கூறப்படுகிறது.

தேவ குருவின் சாபத்தால், ரம்பை, ஊர்வசி இருவரும் அழகாலும் குணத்தாலும் சிறந்த தாசியான முத்தி என்பவள் வயிற்றில் வந்து பிறக்கின்றனர். அவர்கள் சிறு நல்லாள், பெரு நல்லாள் என அழைக்கப்பட்டனர். தேவ குருவின் வாக்கின்படி இருவரும் அவ்வூரில் குடிகொண்டுள்ள தொண்டீசுவரரை வழிபட்டு, இந்திரனை மணக்க வேண்டித் தவம் செய்தனர். ஒரு நாள் அவர்கள் வழிபட்டுத் திரும்பிய வழியில் அப்பதியில் வாழ்ந்த சோழ அரசன் பெருநற்கிள்ளி அம்மகளிரை எதிர்கொண்டு, "கணிகை மாதராகிய நீங்கள் ஏன் ஆடவர்கள் தரும் பொருளைப் பெற்றுக்கொண்டு, அவர்களுடன் கூடுவதில்லை" என வினவுகிறான். அதற்கு அவர்கள், " தேவந்திரனைத் தவிர வேறு எந்த ஆடவருடனும் நாங்கள் கூடுவதில்லை" என்கின்றனர். "நீவீர் இந்திரனை மணக்கும் கற்புடையராயின் இந்திரனைக் கொண்டு பொன்மாரி பொழியச் செய்ய வேண்டும்" என்று கூறுகிறான். அன்றிரவே தேவேந்திரன் வந்து அம்மாதரைக் கூடி மகிழ்ந்து அவர்கள் வேண்டியபடியே பொன் மாரி பொழியச் செய்தான். அதனால் அந்நாடு பூந்துறைநாடு என்று பெயர் பெற்றது.

அம்மாதர் இருவரும் வாழ்ந்தது இன்றைய ஈரோட்டில்தான். அவர்கள் பெயரில் இன்றும் இரு மலைகள் சுட்டப்படுகின்றன. பெரிய நல்லாக்காள் மலை, சின்ன நல்லக்காள் மலை என்பனவே அம்மலைகள். அவை இரண்டும்

பொன்நிறமாகக் காட்சியளிக்கிறதாம். இவை இரண்டையும், அவர்களது வறுமை நீங்க சிவபெருமான் தானமாகக் கொடுத்தாராம். அம்மலைகள் மொடக்குறிச்சி அருகே, ஏழுமாத்தூருக்கு மேற்கே காட்சி தருகின்றன. இந்திரனைக் கொண்டும் பொன்மாரி பெய்யச் செய்தது சிவபெருமானே என்றும் கூறப்படுகிறது. ஈரோட்டில் உள்ள அச்சிவபெருமானின் பெயர் – ஆருத்ரா கபாளீஸ்வரர், இறைவியின் பெயர் – வாரணி அம்பாள் புராணப் பெயர் – திருத்தொண்டீஸ்வரர்.

பொன்மாரி பொழியச் செய்த இச்சிவபெருமானை மனதில் கொண்டே பழனியப்பையா இப்பொன்மாரி அந்தாதியை படைத்திருப்பார் எனக் கருதத் தோன்றுகிறது.

அந்தாதியின் 44வது பாடலில், “செம்பொன்மாரிப் பதிவாழ் தேவன்” என்று குறிப்பிடுவது அதற்கு வலுச் சேர்க்கிறது.

இவ்வந்தாதிப் பாடல்களில் பழனியப்பையாவின் துறவு மனத்தைத் தெள்ளத் தெளிவாக அறிந்துகொள்ளமுடிகிறது. பொன்மாரி நாதனான சிவபெருமானிடம் அவர் வேண்டுவதைப் பாருங்கள்.

என்னை வீடுபேறு அடையச் செய்வாய், இல்லறப் பாசங்களிலிருந்து விடுவிப்பாய். என் குற்றங்களைப் பொறுத்தருள்வாய். காயம் (உடல்) பொய் என்பதை உணர்த்துவாய். ஆசையை அகற்றுவாய். தையலார் (பெண்கள்) மீதான ஆசையை அகற்றுவாய். உடலாசையை அகற்றுவாய். என்று பாடலுக்குப் பாடல் இறைவனிடம் இறைஞ்சுகிறார்.

பொன்மாரி நாதனை நினைக்காத நாளில்லை என்பதை,

“வாயுமுனை வாழ்த்த, மனம் உன்னை நினைப்ப

காயம் உன்தன் கழல் போற்ற”

என்று பாடுவதிலிருந்து அறியலாம்.

தனது உலக வாழ்வில் தான் செய்தது அனைத்துமே தவறானது என்றும் அவை அனைத்தையும் பொறுத்துக் கொண்டு எனை ஆட்கொள்வாய். மறு பிறப்பே வேண்டாம் என இறைவனை வேண்டும் பாடல்,

“பகரும்மொழி யாவும் பொய், பண்ணும் தொழில் தீமை,

நிகரில் பிழை செய்யினும் யான், நீயே – மிகஇரங்கி

ஆண்டுகொள்வாய் பொன்மாரி ஆரமுதே, நாயினன்

மாண்டு பிறவா வகை”

நாம் வாழும் வாழ்வு உண்மையானதல்ல. இறைவனின் திருவடிகளே உண்மையானவை என்று உணர்த்தும் ஒரு பாடல்,

“தாழ்வாம்பொய் வாழ்வை சகத்தீர்களே நீர்தாம்

வாழ்வாம் என மதித்து வாடுகிறீர் – வாழ்வுறவே

எம்பெருமான் பொன்மாரி ஈசனிரு தாளிணையை

நம்புவீர் சேர்வீர் நலம்”

இறைவன் திருவடி நமக்கு என்றும் இன்பம் தரவல்லது. அத்திருவடிகளைப் போற்றும் பொன்மாரியந்தாதியைப் பாராயணம் செய்வோம். இறைவன் அருள் பெறுவோம்.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

## பாவம்!

பெண்களுடைய குணங்கள் நான்கு என்று ஒரு வழக்கு உண்டு. அவை அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை. இந்த நான்கிலும் முதலில் நிற்பது அச்சம். பெண்கள் மெல்லியலார் ஆதலின் அஞ்சுவது இயல்பு. அவர்களுக்குத் தைரியம் குறைவுதான். சிறு கரப்பான் பூச்சியைக் கண்டாலும் பயந்து அடித்துக்கொண்டு ஓடுவார்கள் பாம்பென்றால் சொல்ல வேண்டுமா? ‘பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்’ என்பது பழமொழி, படையே நடுங்கும்போது பாவையர் நடு நடுங்கிக் கலங்குவது வியப்பே அன்று. பாம்பு தம்மிடம் வந்தால் மட்டும் நடுங்குவார்கள் என்பது இல்லை; வேறு ஒருவரை அணுகினாலும் நடுங்குவார்கள். கண்ணால் கண்டு விட்டாலே போதும்; நிலை குலைவார்கள்.

காரைக்கால் அம்மையார் பேயாக மாறினாலும் இயல்பான பெண் தன்மை மாறவில்லை. அவர் இப்போது தம் அச்சத்தை வெளிப்படுத்துகிறார். அந்த அச்சத்தில் பெண்ணின் இயல்போடு தாய்ப் பண்பும் கலந்திருக்கிறது. இறைவனுக்குத் தாயான பெருமாட்டி அல்லவா? ஆதலின் இறைவன் மேல் உள்ள பாம்பை எண்ணிப் பயப்படுகிறார்.

“யாராவது ஆண் பிள்ளைகள் இல்லையா? ஓடி வாருங்கள்; ஐயோ இந்தப் பாம்பை இங்கே புகவிடாமல் யாரும் தடுக்க மாட்டீர்களா?” என்று கூக்குரல் இடுவதுபோல முறையிடுகிறார்.

“இந்த அபாயத்தைத் தடுக்கும் யோக்கியதையை உடையவர்கள், தகவு உடையவர்கள், யாரும் இல்லையா? இருந்தால் வாருங்கள். இங்கே வாருங்கள். இந்தப் பாம்பு இந்த இடத்தில் போகும்படி விட்டால் மிகப் பொல்லாதது

தீங்கு வந்து விடும்'' என்று சொல்கிறார்.

"இறைவனுடைய திரு மார்பில் அழகிய மாலை இருக்கிறது. அந்த மாலையோடு மாலையாக அல்லவா தான் இருக்க வேண்டுமென்று இந்தப் பாம்பு போகிறது? அதை விடாதீர்கள்'' என்று கூவுகிறார். இறைவனிடம் அம்மையாருக்குள்ள பரிவு அப்படிப் பேசச் சொல்கிறது.

"தகவுடையார் தாம் உளரேல்

தார்.அகலம் சாரப்

புகவிடுதல் பொல்லாது கண்டிர்!''

[தகடு தகுதி. தார் மாலை. அகலம் மார்பு.]

இறைவனுடைய பெருமையையும், வலிமையையும் நன்கு அறிந்தவர்தாம் அம்மையார். ஆனால் அவையெல்லாம் இப்போது நினைவுக்கு வரவில்லை. மடியில் பெரிய மாணிக்கத்தை வைத்திருப்பவன் ஏதேனும் செடி அசைந்தாலும் திருடன் வந்து விட்டானோ என்று நடுங்குவான். அந்த மாணிக்கத்தின்மேல் உள்ள பற்றே அதற்குக் காரணம்.

குழந்தை உள்ளே உணவு கொள்வதைப் பார்த்துவிட்டு வெளியில் வரும் தாய், "ஏதோ குழந்தை கிணற்றில் விழுந்து விட்டது'' என்று ஒருவர் சொல்லக் கேட்டால், "ஐயோ! நம் குழந்தைதான் விழுந்து விட்டதோ' என்ற அச்சம் அவளுக்கு உண்டாகும். உள்ளே இருந்த குழந்தை கிணற்றுக்கு எப்படிப் போகும்? கிணறு இங்கே அருகில் எங்கே இருக்கிறது?' என்றெல்லாம் அப்போதைக்கு யோசிக்கத் தோன்றாது. இது அன்பின் இயல்பு. அறிவு மறைத்து அன்பு தலைப்படும்போது எல்லாம் மறந்து விடும்.

ஆகவே, அம்மையார் பாம்பைக் கண்டு அஞ்சுகிறார். மாலை பூண்டு அழகாக இருக்கும் மார்பில் இந்த நஞ்சுடைய பாம்பு புகுந்தால் என்ன விபரீதம் நேருமோ? இதை விடுவது நல்லது அன்று; பொல்லாதது என்று எண்ணுகிறார்.

அந்த நாகம் அவர் மேல் ஊர்கிறது. அது பெரிய பாம்பு; அது அடாத செயலைச் செய்வது; மிகவும் அடாத நாகம் அது. "அது உயிரை உண்டு விடும் என்று சொல்ல மனம் இல்லை. 'ஆ! இது பொல்லாது. அடாத செயல் செய்வது'' என்று சொல்கிறார்.

"என்ன அம்மா, இப்படிப் பயப்படுகிறீர்கள்? இறைவனுக்கு இது அணிகலன் அல்லவா? அவன் நஞ்சையே உண்டவன் ஆயிற்றே. தேவர்கள் நடுநடுங்கும்படி வந்த ஆலகால விடத்தையே உண்டு கலங்காமல் இருக்கும் போது இந்தப் பாம்பு எனன செய்துவிடும்?'' என்று ஒருவர் கேட்கிறார்.

அம்மையாருக்கு நடுக்கம் போகவில்லை. "தாமதம் செய்யாதீர்கள். ஏதாவது தவறு நேர்ந்தால் மிகவும் ஆபத்தாகி விடும், உடனே பாம்பைத் துரத்துங்கள்'' என்கிறார்.

தொண்டர் சிரிக்கிறார். "இறைவன் இன்றுதான் இதை அணிந்தானா? எத்தனையோ காலமாக இது அவன் திருமேனியில் இருக்கின்றது. நீங்கள் சொல்கிற தாரோடு தாராக குளிர்ச்சியாகவும், பளபளப்பாகவும் இருக்கின்றதே! இவ்வளவு காலம் வாராத ஆபத்துப் புதிராக முளைத்து விடுமா?'' என்று கேட்கிறார்.

அம்மையார் அவர் கூற்றை மறுக்க முடியவில்லை. ஆனாலும் அம்மையாருடைய அச்சம் இன்னும்

நீங்கவில்லை. எப்படியாவது இந்தப் பொல்லாத நாகத்தை இறைவன் திரு மார்பிலிருந்து ஒட்டிவிட வேண்டுமென்று பார்க்கிறார். தகவுடையார் யாவரும் அதைச் செய்ய மாட்டார்கள் போலத் தோன்றுகிறது.

அம்மையார் சொன்ன காரணம், அதாவது இறைவனுக்குப் பாம்பால் தீங்கு நேரலாம் என்ற காரணம் சரி என்று தானே தொண்டர், தகவுடையோர் ஒருவர், எடுத்துரைத்தார். அதற்கு மறுப்புச் சொல்ல வேண்டாம்? சொல்வதும் அவ்வளவு எளிதன்று. ஆகவே வேறு ஒரு காரணத்தைச் சொல்லலாமா? அம்மையார் யோசிக்கிறார், அவருக்கு ஒரு காரணம் தோன்றுகிறது. ஆம்! அந்தக் காரணத்தை யாரும் மறுக்க முடியாது.

"நீங்கள் சொல்வது சரியாகவே இருக்கட்டும். பாம்பு எம்பெருமானை ஒன்றும் செய்யாது என்பதை இப்போதைக்கு ஒப்புக்கொள்கிறேன். ஆனால் மற்றோர் ஆபத்து இருக்கிறதே அது வராமல் தடுப்பது எம்படி?"

"என்ன ஆபத்து?"

"எம்பெருமான் திருமேனியோடு ஒட்டிப் பாதியும் பாதியுமாக இறைவி இருக்கின்றாளே, அவள் இமயமலை ராசனுடைய செல்லக்குழந்தை அல்லவா? ஒரு கணமும் எம்பெருமானை விட்டு அகலாமல் அவனுடைய வாம பாகத்தில் ஒட்டி இணைந்து விளங்கும் உமாதேவியை மறந்துவிட்டீர்களே! அந்தப் பாம்பு இறைவன் திருமேனியளவில் நின்றுவிடும் என்று சொல்ல முடியுமா? அதுதான் எப்போதும் நாக்கை நீட்டிக்கொண்டு உணர்ந்தபடியே இருக்கிறதே! மலைமகள் மீது தாவலாமே! ஒரு நாள் அந்தப் பிராட்டியின் மேலே ஊர்ந்தால் ஏ! அதை நினைத்தாலே பயமாய் இருக்கிறது. அப்படி ஆடும்படி விடுதல் மகாபாவம். பெண் பாவத்தைக் கொட்டிக் கொள்ளாதீர்கள். பெண்ணின் இயல்பு எனக்கல்லவா தெரியும்? இந்தப் பாம்பு இந்த எல்லையை விட்டுத் தாண்டமாட்டேன் என்று முறியா எழுதிக் கொடுத்திருக்கிறது? அம்பிகையின் திருமேனியில் புகாது என்று உறுதி கூறுவீர்களா?"

யாவரும் யோசிக்கிறார்கள்.

"தகவுடையவர்கள் இல்லையா? அம்மையின் மேல் பாம்பு ஊராமல் இருக்க வேண்டுமானால் இறைவன் மார்பிலேயே அது புகும்படி செய்யக்கூடாது. அவனுக்கும் அம்மைக்கும் நெடுந்தூரமா? அவன் மார்புக்கு ஆபரணம் என்று சொல்கிறார்களே! அங்கேதான் தார் இருக்கிறதே! அது போதுமே! இந்தப் பாம்பு எதற்கு? இதுவரைக்கும் இருப்பதுபோலவே அது இருக்கும் என்பது என்ன நிச்சயம்? என்றேனும் ஒருநாள் மலைமகளைச் சாரலாம். அதை நினைத்தாலே பயமாய் இருக்கிறது! அப்படி ஆகிவிட்டால் அதைப் போன்ற மகாபாவம் வேறு இல்லை."

இப்படியெல்லாம் நினைக்கும்படியாக அம்மையார் பாடுகிறார்.

"தகவுடையார் தாம் ஊரேல் தார்அகலம் சாரப்
புகவிடுதல் பொல்லாது கண்டீர்! மிகஅடா
ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்
சார்ந்திடுமேல் ஏபாவந்தான்!"

இது காரைக்கால் அம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியில் 13ஆம் பாடல்.

# தனவணிகர் திகழ்மாலை

# காரைக்கால் அம்மையார் வரலாறு

## (நேரிசை ஆசிரியப்பா)



**மெ.சண்முகம்,**
(ஓடாப்புலி)
காரைக்குடி

கையால் நடந்து, கயிலை நாடி,
மேயும் மனது மெய்யே மொழிய,
ஈசன் நாவால் அம்மை ஆன,
தேசம் போற்றும் தவமே பெற்ற,
அறுபத்து மூவரில் அம்மை மூவரில்
ஒருவராய் உயர்ந்த ஒளியாய்ச் உடர்ந்த,
மாங்கனி கொடுத்து மனையறம் கடந்த,
ஓங்கிய தமிழால் அந்தாதி தந்த,
அம்மையாம் காரைக்கால் அம்மையோ, தனவணிகர்
தம்மரபில் தனதத்தன் தர்ம வதிக்கு
ஆயிரத் தைந்நூறு ஆண்டு முன்னே,
ஆயிரம் புகழோடு ஆன பேரோடு
ஆவணித் திங்கள் கார்த்திகைத் திருநாளில்
தேவ மங்கைபோல் தங்கமாய்ப் பிறந்தாள்.
புனித வதியாய் பொழுது விடாதிப்
புனித வதியோ, சிவனைச் சிந்திக்க
மனிதப் பிறவி மணாளன் பரமதத்தன்
தம்மை மறந்து, அம்மை துறக்க,
அம்மை நினைவோ, ஆண்டவன் நிழலைப்
பற்றிப் பதிகம் போற்றிப் பாட,
அற்புதத் திருவந் தாதி, திருவாலங்
காட்டு மூத்த திருப்பதிகம், முக்தி
கூட்டும் திருவிரட்டை மணிமாலை, ஆகி,னர்
சைவம் நூலாய்ச் சேர்ந்து நாளும்
சிவமே நரம்பிற் சேர்ந்து நாடி
மாறிப் பேயாய் மாறிப் பெம்மான்
தெறிந்து; அகமே தெளிந்து; அவனைப்
போற்றி வணங்கிப் பிறவாமை வேண்டிப்
பிறப்பின் மறவாமை வேண்டி, மகிழ்ந்து பாடி,
அறவன் ஆடும் அடியின் அடியிருக்க
வேண்ட, ஆண்டவன் வாடா மலர்த்திருத்
தாண்டவம் காட்டித் திருவாலங் காடு
வரப்பணித்து; வரமே பொழிந்தனன் வாழும்
புராணம்; பெரிய புராணம் பெற்றயித்
திருமங்கை, பங்குனித் திங்கள் சுவாதித்
திருநாள் ஈசன் திருவடி இணைந்து
திருமுறை; சைவத் திருமுறை ஆகினளே!
வாழிய அம்மை! வாழிய திருமுறை!
வாழிய நற்றன வணிகர்!
வாழிய! வாழிய! வாழிய! வாழியவே!

# பொன்னனையாளின் பேரன்பு



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

பெண்கள் என்றாலே பேரன்பு கொண்டவர்கள்தான். குடும்பத்தினர் மேல் எப்போதும் அளவற்ற அன்பைப் பொழிபவர்கள். இனியவர்கள், இன்னாதவர்கள் பாகுபாடு கருதாமல் தமக்குத் தொடர்புடைய அனைவரும் நலமுடன் இருக்கவே எண்ணுவார்கள். அதிலும் இறைபக்தி என்று வந்துவிட்டால் அவர்களின் பேரன்பு இன்னும் விகசித்து ஒளிவிடும். இப்படி இறைவனின் மேல் பேரன்பு கொண்ட பொன்னனையாள் என்பவளுக்காய் இறைவன் நிகழ்த்திய ரசவாத வித்தையைப் பார்ப்போம்.

மதுரைக்குக் கிழக்கே வைகையாற்றின் கரையில் அமைந்திருக்கிறது திருப்பூவனம் என்னும் சிற்றூர். சில நூற்றாண்டுகளுக்கு முன் அவ்வூரின் தளிச்சேரியில் பொன்னனையாள் என்னும் பொதுமகள் வசித்து வந்தாள். நாட்டிய சாத்திரம் அனைத்தும் கற்றுச் சிறந்தவள். சிவனின் மேல் பக்தி கொண்டு பாடல்கள் இயற்றுவதும், அவற்றைப் பக்திப் பரவசத்துடன் பாடுவதும், வீணை வாசிப்பதும், தான் இயற்றிய பாடல்களுக்குப் பதம் பிடித்து நாட்டியமாக ஆடுவதுமே அவளுக்குப் பிடித்த செயலாக இருந்தது.

சிவனின் மேல் பக்தி கொண்டவள் மட்டுமல்ல. சிவனடியார்களையும் சிவ ரூபங்களாகவே கருதிப் பணி செய்பவள். இரவு நீங்கி விடியத் தொடங்குமுன்னே துயில் எழுவாள். வையையின் தூய நீரில் நீராடித் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வாள். நித்தமும் திருப்பூவணநாதர் கோவிலுக்குச் சென்று தீப தூப அர்ச்சனை செய்து வணங்கி வழிபடுவாள். இறைவனுக்காய்த் தன் நாட்டிய நிகழ்வை அர்ப்பணிப்போடு நிகழ்த்துவாள்.

இறைவனைச் சேவிக்க வரும் அடியார்களை இறைவனாகவே கருதி அவர்களைத் தன் இல்லத்துக்கு எழுந்தருளச் செய்து அறுசுவை உணவைத் தன் கையாலே சமைத்து அவர்கள் உண்ணும்படிச் செய்வாள். அவர்கள் உண்ட மிச்ச உணவை இறைவனின் பிரசாதமாகக் கருதி அதன் பின்புதான் அவள் உணவு உண்பாள்.

இத்தகைய பொன் மகள் வீட்டில் ஒருநாள் திருடர்கள் கன்னம் வைத்தார்கள். தினமும் உறங்குமுன் இறைவன் மேல் பக்தி கொண்டு பாடல்களைப் பாடிவிட்டுத் துயில்வது பொன்னனையாளின் வழக்கம். தானே பாடல்கள் இயற்றும் வல்லமை உள்ளவள் என்பதால் திருப்பூவண நாதரின் மேல் ஒரு செய்யுளை இயற்றத் தொடங்கினாள். பாதி வரை சொல்லி இருப்பாள். ஏனோ அதன்பின் சொல்ல இயலாமல் தடங்கித் தவித்தாள்.

திருட வந்த எண்மர்களில் எழுவர் சகோதரர்கள். ஒருவர் அவர்களின் தங்கையின் கணவர் தலைமலை கண்டர். பரம்பரைத் திருடர்கள் குலத்தில் பிறந்திருந்தாலும் அவர் என்னவோ திருட்டை வெறுத்து சிவப்பணியையே முழுமூச்சாகக் கொண்டவர். திருமணத்துக்குப் பின் அவரின் மனைவி தன் தாய்வீட்டார் தந்த சீர்வரிசையைக் கொண்டு குடும்பம் நடத்தினாள். அதன்பின் வாழ்க்கையை நடத்தப் பொருள்வேண்டித் தன் கணவரையும் தமையன்களோடு களவு புரிய அனுப்பினாள்.



தன் சம்மதம் இல்லாமல் வந்த அவரோ பொன்னனையாள் இல்லத்தில் அவளின் துயிலறைக்குப் பக்கத்தில் பதுங்கி இருந்தார். செய்யுளை முடிக்க அவள் சிரமப்படுவதைக் கண்டு அடுத்த அடியை அவர் எடுத்துக்கொடுக்க அவள் மகிழ்ந்து அதைச் சேர்த்து அதற்கு அடுத்த அடியைச் சொல்லி முடித்தாள். ஆச்சர்யத்துடன் விளக்கை ஏந்தி இதைச் சொல்லியவர் யாரென்று பார்க்க அவள் வெளியே வர அங்கே பதுங்கி இருந்த எழுவரும் ஓட்டம் பிடித்தார்கள்.

தலைமலைகண்டர் மட்டும் தயங்கி நிற்க வெளியே வந்த அவள்," பூவணநாதர் பாடலை அருமையாகப் பூர்த்தி செய்தீர்கள். நீங்கள் யார் ஐயா?" என வினவினாள். அவரோ மனம் வருந்தி,"அம்மா, நான் உன் வீட்டில் கன்னமிட வந்த கள்வன்." என்று கூறினார். அவளோ,"அப்படிச் சொல்லாதீர்கள் ஐயா, தகுந்த பொருள் கொண்டு அந்தப் பாடலை நிறைவு செய்த நீங்கள் திருப்பூவன நாதராகத்தான் இருக்கவேண்டும்." என்று மகிழ்ந்து கூறிப் பொன்னும் பொருளும் கொடுத்து அனுப்பினாள்.

அவர் சென்றதும் சில நாட்களாக அவள் மனதில் வாழ்வுப் பொருள் பற்றிய சிந்தனை ஓடிக்கொண்டே இருந்தது. இறைப்பொருளைப் பற்றிய அவளுக்கு உலோகாயுதப் பொருட்கள் மீதான நாட்டம் குறைந்தது. தன்னிடம் இருக்கும் பொன்னைக் கொண்டு இறைவனின் திருவுருவச் சிலையைச் செய்ய எண்ணினாள். ஆனால் அவளிடம் அதற்குத் போதிய அளவு தங்கம் இல்லை.

இறைவனுக்குப் பொற்சிலை செய்யும் எண்ணம் நாளடைவில் ஏக்கமாக மாறி அவளை வாட்ட அவளால் உண்ணவும் உறங்கவும் கூட இயலவில்லை. அப்படி ஒருநாள் அவள் சிவனடியார்களுக்கு அமுது படைக்கும்போது அங்கே வந்த சித்தர் ஒருவர் அவளின் வாட்டத்தைக் கவனித்தார். அவளை அழைத்து விசாரிக்க அவளோ "பூவணநாதருக்குப் பொற்சிலை செய்யத் தேவையான தங்கம் என்னிடம் இல்லையே" என்கிற கவலை தன்னைத் தின்னுவதாகத் தெரிவிக்கிறாள்.

"உன்னிடம் இருக்கும் இரும்பு, ஈயம், செம்பு, பித்தளைப் பாத்திரங்களைக் கொண்டு வா அம்மா" எனச் சொல்லிய அவர் என்ன இரசவாத வித்தை செய்தாரோ தெரியாது. அவள் அறியுமுன்னே அனைத்தையும் தங்கமாக ஆக்கி விட்டார். மகிழ்வின் உச்சிக்குச் சென்ற அவள் அவரை வணங்கி நிமிர்ந்தாள். சித்தரைக் காணவில்லை. தன் சிந்தை நிறைந்த சிவனார்தான் சித்தராய் வந்திருக்கவேண்டும் என உணர்ந்துகொண்டாள். அத்தங்கம் முழுவதையும் பொற்கொல்லர் ஒருவரை அழைத்து அழகிய பூவணநாதரின் பொற்சிலையைச் செய்யச் சொன்னாள்.

அவள் மனம் போல் மிக மிக அழகாக பூவணநாதரின் திருவுருவப் பொற்சிலை அமைந்தது. தங்கத் தகாயமாகத் தன் எதிரே ஜொலித்த பூவணநாதரைப் பார்த்துப் பரவசமான அவள் தன்னை மறந்து ஒரு குழந்தையைக் கொஞ்சுவது போல "அச்சோ, அழகிய பிரானே" என்று கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டாள். அப்படி அவள் உள்ளன்போடு கிள்ளியதும் பொன்னாலான அச்சிலையின் கன்னத்தில் கிள்ளிய வடு ஏற்பட்டது. இதைக்கண்ட அவள் இன்னும் மகிழ்ந்து இறைத்தொண்டு புரிந்து இறைவனோடு ஐக்கியமானாள்.

பெண்ணின் அன்பு பேரன்புதான். அதிலும் பொன்னனையாளின் அன்பு இறையன்பின் சாட்சியாகத் திருப்பூவணத்துப் பூவனநாதரின் பொற்சிலையின் கன்னத்து வடுவோடு இன்றளவும் விகசித்துப் பிரகாசிக்கிறது.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 9



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேசச் செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# சிதம்பரம்

பகுதி – 2

### நூல்களில் சிதம்பரம்

தமிழகத்திலுள்ள கோவில்களில் அதிகமான நூல்களினாலும், பாடல்களினாலும் போற்றப்படுகின்ற கோவிலாக சிதம்பரம் நடராசர் கோயில் உள்ளது. இத்தலத்தினைப் பற்றி 43 நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு.

1.தேவாரம் 11 திருப்பதிகங்கள்

2.திருவாசகம் 25 திருப்பதிகங்கள்

3.திருக்கோவையார்

திருமுறைக் கண்ட புராணம்

4.திருவிசைப்பா

5.திருபல்லாண்டு

6.திருமந்திரம்

7.கோயில் நான்மணிமாலை

8.கோயில் திருப்பண்ணியர் விருத்தம்

9.பெரியபுராணம்

10.சிதம்பரம் மணிக்கோவை

11.சிதம்பரச் செய்யுட் கோவை

12.சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை

13.தில்லைக்கலம்பகம்

14.தில்லையுலா

15.மூவருலா

16.தில்லை யமகவந்தாரி

17.சிதம்பரவெண்பா

18.சிதம்பர சபாநாத புராணம்

19.பாண்டிய நாயக முருகன் பிள்ளைத் தமிழ்

20.புலியூர் வெண்பா

21.நடேசர் திருவருட்பா

22.நடராச திருவருட்பா

23.நடராசர் சதகம்
24.நடராசர் திருப்புகழ்
25.சிவகாமியம்மை பிள்ளைத் தமிழ்
26.சேக்கிழார் புராணம்
27.சிவகாமியம்மைப் பதிகம்
28.தில்லை கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி
29.தில்லை நவமணி மாலை
30.சிதம்பர விலாசம்
31.பரமரகசிய மாலை
32.திருவருட்பா
33.தில்லைத் திருவாயிரம்
34.புலியூர் புராணம்
35.சிதம்பரப் புராணம்
36.நடராஜர் காவடிச்சிந்து
37.நடராசர் பத்து
38.நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகள்
39.சிதம்பரப்பாட்டியல்
40.முத்துத்தாண்டவர் கீர்த்தனைகள்
41.சிதம்பரம் சிவகாமியம்மை பஞ்சரத்தினம்
42.தில்லை பாதி நெல்லை பாதி
43.சிதம்பரம் சேஷத்திர மகிமை

## திருவிழாக்கள்

1. திருவாதிரை திருவிழா : திருவாதிரை நட்சத்திரத்திற்கு பத்து நாள் முன் கொடி ஏற்றி விழா நடைபெறும். இத்திருவிழாவில் ஒரு தனி விசேசம் உண்டு. இவ்விசேசம் மாணிக்கவாசகருக்கு அமைவது. பத்து நாள்களிலும் சாயுங்கால தீபாராதனையின் போது மாணிக்கவாசகரை சுவாமியின் சன்னதிக்கு எழுந்தருளச் செய்து




திருவெம்பாவைப் பாட்டுகள் பாடிச் சுவாமிக்குத் தீபாராதனை நடைபெறும். நாள்தோறும் காலை விழாவில் மாணிக்கவாசகரையும் எழுந்தருளச் செய்வதுடன் 10 ஆம் நாள் தரிசனம் முடிந்தவுடன் மாணிக்கவாசகருக்கும் தீபாரதனை நடைபெறும். சுவாமிக்கு விடையாத்தித் திருவிழா முடிந்த மறுநாள் மாணிக்கவாசகருக்கும் விடையாத்தித் திருவிழா நடைபெறும்.

2. ஆனித்திருமஞ்சனம் 10 நாள் திருவிழா ஆனி உத்திர நட்சத்திரத்திற்குப் பத்துநாள் முன் கொடிஏற்றி முதல்நாள் திருவிழா முதலாக எட்டாந்திருவிழா வரையில் உற்சவ மூர்த்திகளான சோமாஸ்கந்தர், சிவானந்த நாயகி, விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர் முதலிய பஞ்சமூர்த்திகளும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வெள்ளி, தங்க வாகனங்களில் வீதியுலா வருவார்கள்.

சித்திரை வருடப்பிறப்பு, திருவாதிரை நட்சத்திரம், அமாவாசை முதலிய விசேச நாள்களில் நடராஜமூர்த்தி சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்தருள்வார். மற்ற மாதங்களிலும் இவ்வாறு தீர்த்தம் கொடுத்தருள்வார். சித்திரை முதல் பங்குனி முடிய பன்னிரு மாதங்களில் மாதப்பிறப்பு, பிரதோசம், வெள்ளிக்கிழமை, திருவாதிரை, கார்த்திகை, அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களில் இரவு விழா நடைபெறும்

## 3 ஆருத்ரா தரிசனம்

மார்கழி திருவாதிரை என்பது மார்கழி மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தோடு கூடிய பௌர்ணமியில் கடைபிடிக்கப்படும் வழிபாடாகும். இந்நாளிலேயே இறைவன் நடராஜப்பெருமான் பதஞ் சலி முனிவருக்கும், வியாக்ரபாத முனிவருக்கும் காட்சி தந்து நடனம் ஆடிக் காண்பித்தார். அது மட்டுமின்றி, இதே நாளில்தான், மாணிக்கவாசகரின் திருவெம்பாவை நிறைவுற்று அவர் ஈசனை தரிசித்தார். அதேபோல், இன்றுதான் ஈசன் தேவலோகப் பசுவான காமதேனுவுக்கும் தரிசனம் தந்து அருள்புரிந்ததாக ஐதீகம். இந்நாளிலேயே பார்வதி தேவியின் தவத்தில் மகிழ்ந்து அவரை மணக்க சிவபெருமான் சம்மதம் கூறிய நாளாகக் கருதி, இன்று கன்னிப்பெண்கள் தங்களுக்கும் நல்ல கணவன் கிடைக்க வேண்டி வழிபடுகின்றனர். சிதம்பரத்தில் ஆருத்ரா தரிசனம் கொடியேற்றத்துடன் துவங்கப்படும் நடராஜப் பெருமாள் முதல் நாள் சந்திர பிரபை வாகனத்திலும் அடுத்த நாள் சூரிய பிரபை வாகனத்திலும் அடுத்த நாள் பூத வாகனத்திலும் திருவீதி உலா வருவார். அடுத்த நாள் வெள்ளி ரிஷப வாகனத்தில் தெருவடைச்சான் வீதி உலாவும் அடுத்த நாள் வெள்ளி யானை வாகன வீதியுலாவும், அதற்குப் பிறகு தங்க கைலாச வாகன வீதி உலாவும் நடைபெறும். பிறகு அதற்கு அடுத்த நாள் தங்க ரதத்தில் சோமாஸ்கந்தர் வெட்டுக்குதிரையில் வீதிஉலாவும் நடைபெறும். அதற்கு அடுத்த நாள் முக்கிய விழாவானதேர்த் திருவிழா நடைபெறும். அன்று இரவு 8 மணிக்கு ஆயிரங்கால் முன் முகப்பு மண்டபத்தில் ஏககால லட்சார்ச்சனை நடைபெறும். தொடர்ந்து அதிகாலை சூரிய உதயத்திற்கு முன், காலை 4 மணி முதல் 6 மணி வரை சிவகாமசுந்தரி சமேத நடராஜமூர்த்திக்கு மகாபிஷேகம் நடைபெறும். பின்னர் காலை 10 மணிக்கு சித்சபையில் ரகசியபூஜையும், பஞ்சமூர்த்தி வீதிஉலா சென்று வந்த பின் பிற்பகல் 2 மணிக்கு மேல் ஆருத்ரா தரிசனமும். ஞானகாச சித்சபா பிரவேசமும் நடைபெறும். அடுத்த நாள். பஞ்சமூர்த்தி முத்துப்பல்லக்கு வீதியுலாவோடு உற்சவம் முடிவடைகிறது.

## திருவனந்தல்/பால் நைவேத்தியம்:

பால், பழம், பொரி முதலியவற்றை நைவேத்தியம் செய்து, தீபாராதனை செய்து, சுவாமியின் பாதுகையை வெள்ளி தங்கப்பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து நடராஜரின் அருகில் வைத்து நடராஜருக்கும் சிவகாம சுந்தரியம்பாளுக்கும் பால், பொரி, பழம் முதலியவை நைவேத்தியம் செய்து, தீபாராதனை செய்வது.

## திருப்பாவாடை உற்சவம்:

சிதம்பரம் சித்ஸபையில் நடராஜர் நடனமாடிய நாள் – தை பூசம் சிதம்பரம் திருத்தலத்தில் நடைபெறுகின்ற பல உற்சவங்களுள் தைப்பூசத்திருநாளில் நடைபெறும் திருப்பாவாடை உற்சவமும் ஒன்று. இதற்கென்று



ஒரு சாசனமும் எழுதப்பட்டுள்ளது. இந்த சாசனத்தில் திருப்பாவாடை உற்சவத்தை தைப்பூசத்தன்று விமரிசையாக நிகழ்த்துவதற்காக பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே நிலம் தானம் செய்யப்பட்டதாக பல குறிப்புகள் இருக்கின்றன. அரிசி, பருப்பு, சர்க்கரை, தேங்காய், பலா முதலியவற்றைக் கொண்டு இனிப்புச் சுவை கொண்ட பொங்கல் திருவமுது செய்து தைப்பூசத் திருப்பாவாடை வைபவத்தின்போது இறைவனுக்குப் படைக்க வேண்டும் என்பதற்காக நிலம் தானம் செய்யப்பட்டது. இவை யாவும் தைப்பூசத்திருநாளில் சிதம்பரம் திருத்தலத்தில் தொன்மைக் காலம் தொட்டு நடைபெற்று வரும் சிறப்பினையும் மகிமையையும் எடுத்துக் காட்டுகிறது

### சிதம்பரத்தின் சிறப்புகள்

1. இங்கு மூலவர் திருமூலநாதர் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். ஆனால் நடராஜரே இங்கு பிரதான மூர்த்தி.

2. நடராஜர் சன்னதியின் எதிரில் உள்ள மண்டபத்தில் நின்றபடி பிரம்மா, விஷ்ணு, சிவன் என மூவரையும் தரிசிக்கலாம்.

3. நடராஜர் சன்னதி அருகிலேயே 108 திவ்ய தேசங்களில் ஒன்றான கோவிந்தராஜப் பெருமாள் தலம் இருப்பது விசேஷம்.

4. சிவனுக்கும், சக்திக்கும் நடந்த போட்டி நடனத்தில், ஆடிய தில்லை காளியின் கோயில் நடராஜர் கோயில் அருகில் உள்ளது.

5. மிகச் சிறந்த கட்டிடக் கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்த அற்புதத் தலம். நடராஜரின் பஞ்ச சபைகளில் இது சிற்றம்பலம்.

6. 51 ஏக்கர் பரப்பளவில் அமைந்த பிரம்மாண்டமான சிவ தலம் இது.

7. சிதம்பரம் நடராஜர் கோயிலில் எட்டுத் திசைகளிலும் சாஸ்தாவின் எட்டு அவதாரங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அந்த அவதாரங்கள் 1. மகா சாஸ்தா, 2. ஜகன்மோகன சாஸ்தா, 3. பாலசாஸ்தா, 4. கிராத சாஸ்தா, 5. தர்மசாஸ்தா, 6. விஷ்ணு சாஸ்தா, 7. பிரம்ம சாஸ்தா, 8. ருத்ர சாஸ்தா.

8. இறைவன் இத்தலத்தில், நடராஜர் என்ற உருவமாகவும், ஆகாயம் என்ற அருவமாகவும், ஸ்படிக லிங்கம் என்ற அருவுருவமாகவும் அருள்பாலிக்கிறார். சைவத்தில் கோயில் என்றால் அது சிதம்பரத்தைக் குறிக்கும்.

9. சிதம்பர ரகசியம்: சித்சபையில் சபாநாயகரின் வலப்பக்கத்தில் உள்ளது ஒரு சிறு வாயில். இதில் உள்ள திரை அகற்றுப்பெறும். ஆரத்தி காட்டப் பெறும். இதனுள்ளே திருவுருவம் ஏதும் தோன்றாது. தங்கத்தால் ஆன வில்வ தளமாலை ஒன்று தொங்கவிடப்பட்டுக் காட்சியளிக்கும். மூர்த்தி இல்லாமலேயே வில்வதளம் தொங்கும். இதன் ரகசியம் இறைவன் இங்கு ஆகாய உருவில் இருக்கின்றார் என்பதுதான். ஆகாயத்துக்கு ஆரம்பமும் கிடையாது, முடிவும் கிடையாது. அவனை

உணரத்தான் முடியும் என்பதே இதன் அர்த்தம்.

10. பஞ்சபூத தலங்களில் சிதம்பரம் ஆகாயத்தலமாகும்.

11. சிதம்பர ரகசிய ஸ்தானத்தில் அம்மனுக்குரிய ஸ்ரீசக்ரத்தையும், சிவனுக்குரிய சிவசக்ரத்தையும் இணைத்து, ஒன்றாக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதாக ஒரு தகவல் உண்டு. இந்த சக்ரத்தில் நடராஜப்பெருமான் ஐக்கியமாகி, தன் ஆனந்த நடனத்தினால் உலகைப் படைத்து, காத்து, மறைத்து, அழித்து, அருளிக் கொண்டிருக்கிறார்.

12. சிதம்பர ரகசியம் : சித்+அம்பரம்=சிதம்பரம். சித் அறிவு. அம்பரம் வெட்டவெளி. மனிதா! உன்னிடம் ஒன்றுமே இல்லை என்பது தான் அந்த ரகசியத்தின் பொருள்.

13. தேவாரம் கிடைத்ததலம்: மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை கண்டெடுத்த தலம் இது.

14. சம்பந்தர் இறைவனையடைய சத்புத்திர மார்க்கத்தைக் கையாண்டவர். அதனால் தென்வாயில் வழியாக நேரே வந்து இறைவனைக் கண்டுகளித்தார்.

15. நாவுக்கரசர் தாச மார்க்கத்தைப் பின்பற்றியவர். தாச மார்க்கம் என்பது ஆண்டான் அடிமை உறவு. ஆகவே வலது புறமாக (கிழக்கு) வந்து ஏவல் கேட்கும் நோக்கத்துடன் இறைவனைக் கண்டார்.

16. சுந்தரர் நட்பு முறையில் இறைவனை வழிபட்டவர். அதனால் பின்புறமாக (வடக்கு) வந்து வேண்டியதை உரிமையுடன் பெற்றவர்.

17. மாணிக்கவாசகர் சன்மார்க்க முறையைக் கடைப்பிடித்தவர்.

(குரு சீட உறவு). ஆதலால் அருட்சக்தி (மேற்கு) பக்கம் வந்து இறைவனைக் கண்டார்.

18. இந்த ஊரின் தேரோடும் வீதிகளில் அப்பர் பெருமான் அங்கப் பிரதட்சணமே செய்தாராம். அப்பர் பெருமானுக்குப் பிறகு தேரோடும் நான்கு வீதிகளிலும் அங்கப் பிரதட்சணம் செய்தவர் குங்கிலியம் பழ சண்முகனார் அவர்கள்

19. இலங்கையைச் சேர்ந்த புத்தமத மன்னனின் ஊமை மகளை மாணிக்கவாசர், நடராஜர் அருளால் பேசச் செய்த தலம்.

20. இத்தலத்து திருக்கோயிலில் சிற்றம்பலம், பொன்னம்பலம், பேரம்பலம், நிருத்தசபை, இராசசபை என்னும் ஐந்து மன்றங்களும் அமைந்திருத்தலும், சிவன் விஷ்ணு இருவர் திருச்சந்நிதிகள் ஒரே இடத்தில் நின்று தரிசிக்கும்படி அமைந்திருத்தலும் தனிச் சிறப்புகளாகும்.

21. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகளும் கோயில் கொண்டுள்ள திருத்தலம் இது.

22. இத்தலத்து முருகப்பெருமான் (சுப்ரமணியர்) குறித்து அருணகிரிநாதர் பத்து திருப்புகழ் பாடல்கள் பாடியுள்ளார்.

23. பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்கள் கயிலையில் தாங்கள் கண்ட சிவனின் நாட்டிய தரிசனத்தை, பூலோக மக்களும் கண்டு மகிழ விரும்பினர். எனவே இத்தலத்துக்கு வந்து ஆதிமூலநாதரை வேண்டி தவம் செய்தனர். இவர்களது வேண்டுதலை ஏற்ற சிவன், திரிசகஸ்ர முனீஸ்வரர்கள் என்போரை கயிலை யிலிருந்து, சிதம்பரத்திற்கு அழைத்து வந்து தைமாதம் பூசத்தில் பகல் 12 மணிக்கு நாட்டிய தரிசனம் தந்தார். இந்த திரிசகஸ்ர முனிவர்களே தில்லை மூலவார யிவர் என்று சொல்வதுண்டு.

24. தேரில் நடராஜர்: இத்தலத்து

நடராஜரைக் காண உலகமே திரண்டு வருகிறது. ஏராளமான வெளிநாட்டவர்கள் கூட, நடராஜரின் சிற்பச் சிறப்பைக் காண வருகின்றனர். அப்படிப்பட்ட அபூர்வ சிலையை, திருவிழாக் காலத்தில் தேரில் எடுத்து வருகிறார்கள்.

25. ரத்னசபாபதி சிலையின் முன்னும் பின்னும் தீபாராதனை:

ஒருமுறை பிரம்மா யாகம் ஒன்றை நடத்தினார். இதற்காக, தில்லை வாழ் அந்தணர் மூவாயிரம் பேரையும் சத்தியலோகத்துக்கு அழைத்தார். தில்லையிலேயே இருந்து, நடராஜரின் திருநடனத்தைக் காண்பதை விட அந்த யாகத்தில் எங்களுக்கு என்ன பலன் கிடைத்து விடப்போகிறது எனக் கூறினர். அப்போது, நடராஜர் யாகத்திற்குச் செல்லும்படியும், யாகத்தின் முடிவில் அங்கேயே தோன்றுவதாகவும் வாக்களித்தார். அவ்வாறு தோன்றிய கோலத்தை ரத்னசபாபதி என்கின்றனர். இவரது சிலை நடராஜர் சிலையின் கீழே உள்ளது. இவருக்கு தினமும் காலையில் 10–11 மணிக்குள் பூஜை நடக்கும். சிலையின் முன்புறமும், பின்புறமுமாக இந்த தீபாராதனையைச் செய்வர்.

26. உடலின் அமைப்பில் நடராஜர் சன்னதி: மனிதனின் உருவ அமைப்பிற்கும், தங்கத்தால் ஆன நடராஜர் சன்னதிக்கும் நிறைய ஒற்றுமை இருக்கிறது. பொன்னம்பலத்தில் நமசிவாய மந்திரம் பொறிக்கப்பட்டு வேயப்பட்டுள்ள 21 ஆயிரத்து 600 தங்க ஓடுகள், மனிதன் ஒரு நாளைக்கு விடும் சுவாசத்தின் எண்ணிக்கையைக் குறிக்கும் அளவில் உள்ளது. பொன்னம்பலத்தில் அடிக்கப்பட்டுள்ள 72 ஆயிரம் ஆணிகள், மனிதனின் நாடி நரம்புகளைக் குறிக்கிறது. கோயிலில் உள்ள 9 வாசல்கள் மனித உடலிலுள்ள 9 துவாரங்களைக் குறிக்கிறது. இதுதவிர ஆன்மிக ரீதியான அமைப்பும் உண்டு.

27. ஐந்தெழுத்து மந்திரமான சிவாயநம என்பதின் அடிப்படையில் பொன்னம்பலத்தின் ஐந்து படிகளும், 64 கலைகளின் அடிப்படையில் சாத்துமரங்களும், 96 தத்துவங்களைக் குறிக்கும் விதமாக 96 ஜன்னல்களும், 4 வேதங்கள், 6 சாஸ்திரங்கள், பஞ்ச (5) பூதங்களின் அடிப்படையில் தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன.

28. அர்த்தஜாம பூஜை இத்தலத்தின் தனிச் சிறப்பு. அர்த்தஜாம பூஜையில் உலகில் உள்ள அனைத்து தெய்வங்களும் கலந்து கொள்வதாக ஐதீகம்.

29. சிதம்பரம் நடராஜர் கோயிலில் உள்ள சிவகங்கை தீர்த்தக்கரையில் திருத்தொண்டத் தொகையீச்சரம் என்ற பெயரில் ஒன்பது லிங்கங்கள் உள்ளன.

30. சிதம்பரம் நடராஜப் பெருமானின் கோயிலில் நான்கு கோபுரங்களிலும் அதிகார நந்தியின் உருவத்தைக் காணலாம்.

• • •

**இந்த இதழ் முழுமையாக மின்னணு இதழாக இருக்கும்.இந்த இதழ் வேண்டுபவர்கள் 9443337011 என்ற தொலைபேசி எண்ணிற்கு புலனத் தொடர்பினைச் (WhatsApp) செய்தால் அவர்கள் இந்த குழுவில் இணைக்கப்படுவார்கள்.**

• • •

சிற்றுலா

# ராமர் பாதம் பட்ட கோடியக்கரை

‘கோடியக்கரை’ என்ற ஊரின் பெயர் பொன்னியின் செல்வனைப் படித்தவர்களுக்கு அறிமுகமானதே! ஆம்! பொன்னியின் செல்வன் துவங்குவது கோடியக்கரையிலிருந்துதான்.

‘கோடியக்கரை’ என்பது, குமரி முனை போன்ற ஒரு முனை. முப்புறம் கடலால் சூழப்பட்ட தீபகற்பம் போன்றதொரு ‘முனை தீபகற்பம்’. POINT OF CALEMERE என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுகிறது. தமிழில் காலிமர் முனை என்றும் கள்ளி முனை என்றும் கூறப்படுகிறது.

அங்கே ஒரு காட்சிக் கோபுரத்தை நிர்மாணித்திருக்கிறார்கள். அதன் மேல் ஏறிப் பார்த்தால் ஒரு அழகான புவியியல் காட்சி நமக்குக் கிடைக்கிறது!. 90 டிகிரியில் அரை வட்டம் போல் நம் எதிரே கடல் வளைந்து செல்கிறது. பாக்ஜலசந்தி என்று புவியியல் பாடத்தில் படித்திருக்கிறோமே! இந்தக் காலிமர் முனையிலிருந்து ராமேசுவரம் வரை உள்ளடங்கக் காணப்படும் கடற்பகுதிதான் பாக்ஜலசந்தி!

இந்தக் காலிமர் முனையைச் சுற்றியுள்ள மூன்று புறத்திலும் உள்ள கடல்பகுதிகளில் அலைகள் வெண்மையாக இல்லாமல் சற்றே பழுப்பு நிறத்தில் இருக்கின்றன.



திருமதி லக்ஷ்மி ரவி,
நாகப்பட்டிணம்

மேலே விரிந்திருக்கும் ஆகாயத்தையும் மேகத்தையும் கீழே உள்ள கடலும் அலைகளும் ஒத்திருப்பது பார்ப்பதற்கு ரம்மியமாக இருக்கிறது.

‘கடலில் அடித்த சுழிக்காற்று’ என்று பொன்னியின் செல்வனில் கல்கி அவர்கள் விரிவாக எழுதியதை அங்கே முழுமையாக உணர முடிந்தது. நம்மையே தூக்கிச் செல்லும்படி வேகமான சுழற்காற்றால் நம் ஆடைகளும், தலை முடிகளும் படாதபாடு பட்டதும் உண்மை.

அந்தக் கடற்கரையில், செங்கற்களால் கட்டப்பட்ட ஒரு சிதிலமான சின்னம் ஒன்று

காணப்படுகிறது. அது சோழர்கள் காலத்தில் கட்டப்பட்ட கலங்கரை விளக்கம் என்றும் அது சுனாமியின் போது அழிந்திருக்கிறது என்றும் கூறப்பட்டது.




**ஸ்ரீ ராமர் பாதம்:**

கோடியக்கரையில், இராமாயண இதிகாச சம்மந்தமான ஒரு செய்தி செவி வழிக் கதையாக உள்ளது. இராமர் சீதையைத் தேடிக்கொண்டிருக்கும்போது, இராவணன் சீதையைக் கடத்திக்கொண்டு தென் திசை நோக்கி இலங்கைக்குச் சென்றான் என்ற செய்தி சம்பாதி மூலம் இராம இலக்குவர் அறிந்து கொள்கிறார்கள். அவர்கள் ராமேசுவரம் சென்று சேது பாலம் அமைக்கும் முன்பாகக் கோடியக்கரைக்கு வந்து இங்கிருந்து இலங்கையைப் பார்த்திருக்கிறார்கள். இவ்விடத்திலிருந்து இலங்கைக் கோட்டையின் பின்புறம் தெரிந்திருக்கிறது. எதிரியைத் தாக்க வரும்போது முன்புறமாச் செல்வதுதான் ஒரு வீரனுக்கு அழகு என்பதால் கோடியக்கரையிலிருந்து ராமேசுவரம் சென்றிருக்கிறார்கள்.

'ஸ்ரீ ராமர் பாதம்' என்ற இந்த இடம்தான், இராமர் கோடியக்கரை





யிலிருந்து இலங்கையைப் பார்த்த இடம். இது மரங்கள் அடர்ந்த காட்டின் நடுவில் இருக்கிறது. இரு புறமும் மரங்கள் இருக்க நடுவில் தார்ச்சாலை போடப்பட்டிருக்கிறது. ராமர் பாதம் இருந்த இடத்தை நாம் அணுகியவுடன் நம்மை வரவேற்பவர்கள் அநுமனும் வானரச் சேனையுமோ என்று சொல்லும் அளவிற்கு சுற்றிலும் ஓடின குட்டிக் குரங்குகள். சாப்பிட ஏதாவது கிடைக்குமா என்பதுபோல் அருகில் வருகின்றன. ஆனால் பயமுறுத்தும்படி ஏதும் செய்வதில்லை. அவை பாட்டிற்கு சென்று விடுகின்றன.

இந்த இடத்தில் ‘ராமர் பாதம்’ என்ற பெயர்ப்பலகை வைக்கப்பட்டிருக்கிறது. அதோடு, ‘இந்த சின்னம் தொல்லியல் துறையினரால் பாதுகாக்கப்படுகிறது’ என்ற ஒரு அறிவிப்புப் பலகையும் இருக்கிறது. மற்றபடி இராமாயணக் கதை பற்றிய விளக்கப் பலகை ஏதும் வைக்கப்படவில்லை. மணல் குன்று போலிருக்கும் அவ்விடத்திற்கு ஏறிச் செல்வதற்காக, உயரம் அதிகமற்ற சுமார் 20 படிகளும் இருந்தன. மேலே ஏறிச்சென்றால் அங்கே ஒரு சிறு மண்டபத்தின் நடுவில் இராமரின் கல்லாலான இரண்டு பாதங்கள் இருக்கின்றன. மண்டபம் யார் காலத்தில் எப்போது கட்டப்பட்டது, போன்ற விவரங்கள் ஏதும் கிடைக்கவில்லை. மண்டபத் திலிருந்து சுற்றிப் பார்த்தால் எங்கும் பசுமையான மரங்களும் செடிகளும், தொலைவில் கடலும் என கண்களைக் கவர்கிறது இயற்கைக்காட்சிகள். நம் கண்களுக்கு இலங்கை தெரியவில்லை. தொலை நோக்கி இருந்தால் ஒருவேளை தெரிந்திருக்கலாம்.

***(சிற்றுலா தொடரும்...)***

# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 4

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

ஆனித் திருமஞ்சன விழாவை முன்னிட்டு 12.07.2024 அன்று அருள்மிகு சிவகாம சுந்தரி அம்மன் உடனுறை ஸ்ரீ ஆனந்த நடராசப் பெருமானுக்கு மகா அபிஷேகம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

## ஆடி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 17.07.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 19.07.2024 | பிரதோஷம் | | |
| 24.07.2024 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 28.07.2024 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 1.08.2024 | பிரதோஷம் | | |
| 12.08.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

அவர்களிடத்தில் அன்பர்கள் கேட்ட வினாக்களும் அதற்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கேட்டுப் பயன்பெற வேண்டுகிறோம்.

**வினா – 1** விளக்கம்

1. மாணிக்கவாசக சுவாமிகள் காலம் எது என்பதைத் தெளிவு படுத்த இயலுமா. அவர், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களில் ஞான மார்க்கத்தைச் சேர்ந்தவர் என்று பொதுவான ஒரு கருது இருக்கிறது. சில பாடல்களில் சிறுதெய்வ வழிபாட்டை இகழ்கிறாரே. அவ்வாறு இருக்க அவர் ஞான மார்க்கத்தைச் சார்ந்தவர் என்று எப்படிச் சொல்ல இயலும்

**வினா – 2** விளக்கம்

2. கம்பராமாயணத்தில் சீதை திருமணம் முடிந்து வரும்போது திருமாலின் மற்றொரு அவதாரமான பரசுராமரும் வருகிறாரே. ஒரே இதிகாசத்தில் இரண்டு அவதாரங்கள் வருவது முரண் இல்லையா.

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 43,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

archive.org/details/@koviloor_andavar_library

Koviloor Andavar Library

(no description yet)

UPLOADS LOANS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

4,109 Results

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 4110 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 250 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி 

திருநெல்லை – ஐப்பசி 

திருநெல்லை – கார்த்திகை 

திருநெல்லை – மார்கழி 

திருநெல்லை – தை 

திருநெல்லை – மாசி 

திருநெல்லை – பங்குனி 

திருநெல்லை – சித்திரை 

திருநெல்லை – வைகாசி 

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.

# நகரத்தார் நல்வாழ்வு அறநிலை

நம்மவர்களில் பொருளாதார ரீதியாக மிகவும் பின்தங்கியுள்ளவர்களின் பிள்ளைகளுக்குப் படிப்புச் செலவுகளுக்காக வட்டியில்லாத, திருப்பிச் செலுத்தும் கல்வி உதவித்தொகை வழங்கப்பெற்று வருவது அனைவரும் அறிந்ததே.

இந்த 2024–2025 கல்வியாண்டுக்கான உதவித்தொகை வழங்கப்பெற இருக்கிறது.

பாலிடெக்னிக் மற்றும் +2க்குப் பிறகு உள்ள பட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்புகளுக்கு வழங்கப்பெறும், இதுபற்றிய முழு விவரங்கள் கொண்ட விளக்கக் குறிப்பேடும், விண்ணப்பப் படிவமும் ஜூன் மாதம் 15ந் தேதி முதல் கோவிலூர் மடாலய அலுவலகத்திலும், நிர்வாக அலுவலகம் இயங்கும் 24/73, ஜவஹர் வீதி, நியூ டவுன், காரைக்குடி–630 001 (04565–237134) என்ற முகவரியிலும் பெற்றுக் கொள்ளலாம். பூர்த்தி செய்யப்பெற்ற விண்ணப்பங்கள் அறநிலைக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி 27.7.2024 ஆகும்.